REGISTERED—No. M. 108.

"... Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks"—Sir Francis (now Lord) Knollys.

... XVIII.] FEBRUARY 1911. [No. 11.

...லசான் காகிதப் பதிப்பு.
...னிப்பிரதி, 5 அணா.
பழைய பிரதி, 6 அணா

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ. 4.
ஆறுமாதத்திற்கு ,, 2-2.




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

**DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE.**

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா
ரென்னுடைய ரேனுமி லர்.-திருக்குறள்.

A POPULAR NEW REVIEW AND TAMIL MONTHLY, ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.—திருக்குறள்

...LUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS.
**ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS.



அட்டவணை.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.
**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,**
Overland 8 Annas extra.] *Lalitalaya, Mylapore, Madras, S.* [Overland 8 Annas extra.
**For the Viveka Chintamani Publishing Committee.**
Thin Paper Edition for the people.] *(Copyright Registered)* [Subscription Price: Yearly Rs. 4

"*Like a spider, like the earth, and like a living creature He produces the Universe.*"—*Sruti.*

# THE VIVEKA CHINTAMANI.

ESTABLISHED 1892.

The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4.

Thick Paper Edition Rs. 5. in Advance.

Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.

**EDITOR** LALITALAYA, MYLAPORE.

**C. V. Swaminatha Aiyar.** *Madras, S. Septr. 191*


332

---

## விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4, வாலியம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

### விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே! விவேகசிந்தாமணி, இப்பொழுது மாதந்தோறும் ஒழுங்ச வெளியாகி வருகிறது. ஸாதாரண வருஷ முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்ல வெளியாகிவருகின்றன. ஸித்தர்கள் ஸாதநமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான ஸா முறைகள் உபநிஷத் வாக்கியார்த்தம் இவை வெளியாகிவருகின்றன. விவேகசிந்தாம யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளைவிக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிை திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், பாஷாஞானம், நீதி போதம், வேதா சாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள் பகவ அர்ச்சுனனுக்குப் போதித்த நித்தியானுகூல ஸாதனங்கள், அப்போதப்போது நடக்கும் வி ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் த நாடெல்லாம் ஜ்வலித்துவருகிறது. இம்மாதாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தா ராகச்சேர்வதுடன் தங்கள் நேசர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படிசெய்து ஆதரி வாக்கோருகிறோம். மனிதர்களுக்கு உய்யும்வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச் செய் உண்மையான ஸத்குருவைப்போல விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவி துதவியாய் நின்று விவேகத்தை வளர்க்கும் குருவாய்த்தோற்றுமென்பதிற் சிறிதும் சந் மில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கையொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களை அப்படியே சேரும்படி செய்யவும் கேட்டுக்கொள்கிறோம். இப்பத்திரிகையை வாங்கி வா போர் இகபர சாதனங்களிரண்டிலுந் தேறிப் பெறுவாழ்வெய்துவர். சன்மார்க்க சாதனமா பத்திரிகையென்றும் விவேக விருத்திக்கின்றியமையாததென்றும் அனேகர் அதை ஆதரித் கொண்டாடிவருகிறார்கள். பத்திராசிரியருக்கும் பத்திரிகைக்கும் அர்பத்நட் கம்பெனி முழு போனதில் நேர்ந்த பெரு நஷ்டத்தால் செலவுக்குவேண்டிய அளவே காபிகளச்சிடப்படுவத வேண்டுவோர் உடனே யெழுதிப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

1910ஞ ஏப்ரல் - மே முதல் 18-வது வால்யம் ஆரம்பம்.

சி. வி. ஸ்வாமிநாதய்யர்.
பத்திராசிரியர்.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி-ஏ., பி-எல்.
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரி

### ORDER FORM.

ஸ்வா,

Please enrol me as a Subscriber and send the Vivekachintamani by V. P. P. for year's subscription, viz, Rs. 4-1-0.

ஐயா, விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை 5 வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P. மூலமாக அனுப்பக் கோருகிறேன். தவறுமல் தபாலாபீஸில் பண கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர், தொழில், ஊர் விலாசம், போஸ்ட் இவைகளை கண்டெழுதவும்.

☞ தனிப்பிரதி ஒற்றைச்சஞ்சிகையானால் அணு $5\frac{1}{2}$, இரட்டை சஞ்சிகையானால் அணு 10 அனுப்பவும்.

"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."

"Seek Truth wherever you can find it." But,

"Make your choice and stick to it till you reach the End."

ஸத்தியம் வத—SPEAK THE TRUTH.

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is Power: Aum

ஸத்தியமே ஜெயம்—SATYAMEVA JAYATI.


புத்தகம். 18.] 1911ஆ பிப்ரவரிமீ, சாதாரணஆ மாசிமீ [சஞ்சிகை. 11.


# DARKNESS AND DAWN.

## A Parable.

18. "From the undefined all things defined take shape at Dawn of Cosmic Day,
But come Nightfall, they melt back all to that same 'Chaos' undefined."

19. "This self-same swarm of creature shapes from state to state evolved, melts back,
O Pártha, Helpless, when Night falls, and takes new shape at Dawn of Day."

20. "But' neath this 'chaos' there abides a State yet deeper, 'Undefined' †
Eternal, which, at fated time of cosmic Doom, is not dissolved."

21. The, 'Indissoluble Undefined' Its Name—It is called the Final Goal,
Which reached, they come not 'back' again. That is my Home beyond this All."

—Bhagavad Gita VIII Verses 18—21

† In the sense of "Not perceivable by the senses and the mind"

# அர்ச்சராதி தூமாதி மார்க்கங்கள்.

## உத்தராயண தக்ஷிணாயன விசேஷார்த்தம்.



இரவு கழிந்தது. பொழுது புலர்ந்தது. மனுஷனுக்கு ஒருவருஷம், தேவதைகளுக்கு ஒரு நாள். அந்த தேவநாள், மனுஷனுக்கு இராப்பகல் என்றுள்ளதுபோல், தக்ஷிணாயனம், உத்தராயணம் என்று இருபகுதியாய் விளங்கும். உத்தராயணம் அர்ச்சராதி மார்க்கம் என்று சொல்லப்படும். தக்ஷிணாயனம் தூமாதி மார்க்கம் என்று சொல்லப்படும். சூரியன் ஆடிமாசம் வியாஸபௌரணமியன்று சந்திரனுடைய வீடாகிய கடகராசியில் (அண்ணாக்கு ஸ்தானத்தில்) இருக்கச், சந்திரன் மகரராசியில் இருக்கிறான். இதுதான் தேவதைகளுக்கு ஸந்தியாகாலம். பிறகு சூரியன் மகாசங்கிராந்தியின்பொழுது மகரராசிக்குள் புகவும், இராவுகழிந்து பொழுதுபுலர்ந்து தேவதைகளுக்கு விடியற்காலம் ஆகிறது. சூரியன் மகரராசியில் சேரவும் சந்திரன் கடகராசியில் அவனுக்கு எதிரே ஒளிவிட்டுப் பிரகாசித்துநிற்க மறுபடியும் சிருஷ்டிகாரியம் துவங்குகிறது. தைப்பூசத்தின் விசேஷம் இதுவே.

மனிதன் பகலில் உழைத்து இரவில் இளைப்பாறுவதுபோல, தேவசிருஷ்டியும் உத்தராயணத்தில் உற்சவகோலமாய் நடந்து தக்ஷிணாயனத்தில் ஒடுங்கும். பிரபஞ்சம் தோன்றுவதும் ஒடுங்குவதுமா யிருப்பதாலும், அதற்குக்காரணம் சிருஷ்டிஸ்திதி லயமாகையாலும், இத்தொழில் நடப்பதையறிந்து அதன் வழிபட்டுய்வதே ஜன்மசாபல்ய மாதலாலும், இந்த வேதபூமியில் எல்லா க்ஷேத்திரங்களிலும் இந்தத் தோற்றவொடுக்கத்தையே லிங்காகாரமாகப் பிரதிஷ்டை செய்து, ஸ்திதிதர்மத்தைச் சக்திரூபமாகவும் விஷ்ணுரூபமாகவும் ஆவாஹனம்பண்ணி ஆலயங்களில் உற்சவம் நடத்திவருகிறார்கள். பெரியோர்கள் எவ்வளவோ பரிசிரமப்பட்டுச்செய்த மந்திர தந்திர உபாயங்கள், இப்பொழுது பரிபாலிக்கத்தக்க புண்யசீலர்க ளில்லாமல், அதன் பூர்வநோக்கம் இழந்து மங்கிப்போய்க் கொண்டு வருகிறது.

மார்கழிமாதம் திருவாதிரையன்று ஆத்மஸ்வரூபியான பகவான் பிறப்புக்குள்ளாகித் தோற்றுகிறார். அதாவது சிஷ்டானுக்கிரகார்த்தம் சிருஷ்டித்தொழிலில் பிரவேசிக்கச் சங்கல்பிக்கிறார். இந்த சங்கல்பஸ்தானம் ஸ்வாதிஷ்டானமாகையால், ஆத்மஸ்வரூபியான சூரியன் தனுஸ்ராசியிலிருந்து, சந்திரனுக்கு எதிரே நின்று தரிசனமளிக்கும்பொழுது ஆருத்ரா தரிசனம், அல்லது கிறிஸ்து பிறந்தநாள் வருகிறது. துவந்துவ உபாதியினால் இருளடைந்துகிடந்தமனஸ் சூரியனுடைய திவ்யதரிசனம்பெற்றதும் சூரியன் மூலப்பிரகிருதியில் பிரவேசித்து பூமியைச் செழிக்கச்செய்கிறான். இதுதான் உத்தராயண புண்யகாலம். இந்தப்புண்ய காலத்தில் தைப்பூசத்தன்று திருமலாப்பூரில் ஸ்வாமி தெப்பஉற்சவம் கொண்டாடுவது வழக்கம். பிரளயகாலத்தில் ஒடுங்கின ஜீவகோடிகளெல்லாம், ஆபதுத்தாரண மூர்த்தியான பகவானுடைய பாதஸ்பரிசத்தினால் பின்னுமுயிர் பெற்று கர்மவசத்தால் இயங்கத் தலைப்படுகின்றன. மனிதனுக்கு இராப்பகல் எப்படியோ, அப்படியே தேவதைகளுக்கு உத்தராயண தக்ஷிணாயன காலங்கள் என்று சொன்னோம். பிரம்மகல்பத்துக்கும் இதுசரியே. பகவத் கீதை 8-வது அத்தியாயம் 18-வது சுலோகத்தில் பகவான் சொல்கிறார்: —

"பிரம்மாவின் பகற்காலத் தொடக்கத்தில் அவ்வியக்தமான பிரகிருதியிலிருந்து வியக்தமான தாவரசங்கமாத்மக ஸர்வபூத பிரபஞ்சங்கள் பிறந்தன. அந்தப் பிரமனது இராக்காலத் தொடக்கத்தில் இப்பிரபஞ்சங்கள் அவ்வியக்தமான பிரகிருதியில் மீண்டும் லயமடைகின்றன.

பிறப்பும் இறப்பும், பகலிரவன்னத் தானே சுழன்று வருகிறது. இதைத்தான் காலசக்ரமென்று சொல்கிறது. காலநேமி யென்பதும் இதுவே. இந்தக் காலசக்கரத்தை யாராலும் தடுக்கமுடியாது. பகவானுடைய திருக்கையிலேந்திய ஆயுதமானாலும் அது தானாகச்சுழன்றுவருகிறது. பகவான் அடுத்த சுலோகத்தில் சொல்கிறார்:—

"ஓபார்த்தா! எந்தப்பிராணசமூகம் தற்பூர்வ கற்பத்திற் பிறந்தனவோ, அந்தப்பிராண சமூகமே சுவாதீனமில்லாததாய் பகல்தோறும்பிறந்து இராத்தோறும் ஒடுங்குகின்றன."

இப்படியே தர்மாதர்ம விருத்திக்ஷயங்களும் மனுஷனுடைய புண்யாபுண்ய பலன்களுக்குத் தக்கபடி "பகல்தோறும் பிறந்து இராத்தோறும் ஒடுங்குகின்றன." தர்மசிந்தையே பகல், அதர்மசிந்தையே இரவு. ஆகவே தர்மசிந்தை யுதிக்குந்தோறும் விருத்தியும், அதர்ம சிந்தை யுதிக்குந்தோறும் க்ஷயமும் "சுவாதீனமில்லாததாய்" தோன்றி பொடுங்கிவரும். இதுதான் ஸநாதனமான தர்மம். இதை, யுண்மையறிந்தோர் சாக்ஷிமாத்ரமா யிருந்துணர்ந்து அதற்கு அநுகுணமா யுழைத்து வருவார்கள். உண்மையறியாதோர் தர்மசக்கரத்தை யெதிர்த்து நின்று சின்னபின்னமாகச் சேதப்பட்டுப்போவார்கள். இந்த உண்மையைச் சாமான்யர் அறியார். சகஜஞானிகள் மட்டுமேயறிந்து பிரகிருதிதர்மத்துக் கநுகுணமா யிருந்துழைப்பார்கள். அவர்கள் எங்கிருந்துழைப்பார்கள்? அவர்களுக்குப் புகலிடம் ஒன்று வேண்டுமே யென்னில், அவர்களுக்குப் புகலிடமாயிருக்குமொன்றை பகவான் அடுத்த 20-வது சுலோகத்திற் சொல்கிறார், கேண்மின்:—

"மேற்கூறிய பூதமய பிரபஞ்சத்திற்குக் காரணரூபனான ஈசுவரனைக்காட்டிலும், வேறே உத்க்ருஷ்டமாய் அகோசரமாய் சாஸ்வதமாயுள்ள பரப்பிரம்மமொன்றுண்டு. அந்த பரப்பிரம்மம் பிரபஞ்சமுழுதும் நசிக்கையில் நசியாதிருக்கும்."

அது விருத்திக்ஷயகாலத்தில் லிங்காகாரமாகவிருந்து (Law of Evolution and Involution) விளங்கி, நாசகாலத்தில் அழிவற்ற பரப்பிரம்மமாக எங்கும் நிறைந்து ஏகமாய் இருக்கும்.

அந்த ஸ்தானமே மோக்ஷஸ்தானம். அங்கேயிருப்பவர்கள் விருத்திக்ஷய தோற்றவொடுக்கங்களால் பாதிக்கப்பட மாட்டார்கள். ஏனெனில் அவர்கள் உபாதியில் ஒட்டியும் ஒட்டாது நிற்கும் மஹிமை பெற்றவர்களாகையினால், உபாதியின் உற்பத்திநாசத்தால், அவர்கள் பயங்குகிறதில்லை.

"எந்தப் பரப்பிரம்மமானது இந்திரியங்களுக்கு நாசரகிதமா யிருக்குமென்று சொல்லப்பட்டதோ, அதுவே பரமோத்க்ருஷ்டமான மோக்ஷஸ்தானமாகச் சொல்லப்படும். அந்தஸ்தானத்தை யடைந்தவர்களுக்கு மீண்டும் பிறப்பில்லை. அதுவே எனது ஸ்தானமான பரமபதம் என்றறிக" வென்று பகவான் உபதேசித்திருக்கிறாராகையால், அந்தப் பரமபதத்திலிருந்து வாழ்பவர்களே ஜகத்ரக்ஷகர்கள் (Saviours of the World) ஆவார்கள். உலகுக்குழைப்பவர்கள், அந்த மஹாபுருஷனைச் சரணடைந்து அவனது திருவடிச் சேவகர்களாய் உலகுய்ய உழைக்கவேண்டும். இப்படிப்பட்ட அடியார்கள் தாமே, உலகத்துக் குபகாரஞ் செய்யத்தக்கவர்கள். மற்றவர்களெல்லாம் வழிகாட்டிகளாக வருவது,—"குருடும் குருடும் குருட்டாட்டமா

டிக் குழிவிழுந்தற்றே" யென்று எம்பெருமான் திருமூலதேவர் உபதேசித்திருக்கிறார். பகவானும்,—

"ஓ பார்த்தா! எந்த மஹாபுருஷனிடத்தில் இந்த ஜகமுழுவதும் லயமடைகின்றதோ; எந்த மஹாபுருஷனால் இந்த ஜகமுழுவதும் வியாபிக்கப்பட்டதோ, அத்தகைய பரமபுருஷனை வேறு விருப்பில்லாத நிச்சல பக்தியோகத்தால் அடையவேண்டும்."—என்கிறார்.

இதுவே உலகுய்ய உழைக்கும்வழி. இதுவே இராப்பகல் தர்மத்தின் உண்மை. இதுவே காலசக்ரத்தின் கிரமக்ரமதர்மம். இதுவே உத்தராயண தக்ஷிணாயன கால விசேஷத்தின் லக்ஷியார்த்த உண்மை. இதையறிந்தவர்களுக்கு எல்லாம் திரைவிரித்தாற்போல், திரிகாலமும் தன் இரகஸியத்தை விரித்துக்காட்டும். இவர்களே திரிகாலஞானிகள். இவர்களே தீர்க்கதரிசிகள். இவர்கள் இக்காலத்தில் நடக்கும் விஷயங்களை ஐயந்திரிபற வுணர்ந்து காலசக்ரம் சுழலுவதறிந்து அதற்கனுகுணமாயிருந்துழைப்பார்கள். விபரீதவார்த்தைகள் பேசார்கள். விபரீதஞானம் பற்றார்கள். அபேதபாவனையிலிருந்து பேதபாவனைகளெல்லாம் 'போம்வழி வரும்வழி மயாவழி"யறிந்து, சாக்ஷிமாத்திரமாயிருந்து நிஷ்பக்ஷவாதராய் நிர்மலசித்தராயிருந்து தர்மம் தலையெடுக்க வுழைப்பார்கள். அதர்மம் நாசகாரணமாகையால், அதர்மத்தை யடக்கார்கள். ஏனெனில் அது தானே யழியுந் தன்மையுள்ளது. அதைத் தடிப்பதினாலேயே அதற்கு உரமுண்டாகிறது. அதைத் தடிக்காது விட்டால் அது தானே யழிந்துபோம். அதர்மம் அழிந்தவிடத்து தர்மம் தனக்குத் தானே தலையெடுக்கும். இதன் மர்மமறியாது மாயாவலையிற் சிக்கிய மாந்தர்கள், பற்பலவாச் சிந்தித்து பாரைமிக்க காப்பாதாகப் பாசாங்கு செய்து பரமோத்க்ருஷ்டமான தர்மத்தை யிழந்து பாழ்வழியில் உழைப்பார்கள். உத்தராயண தக்ஷிணாயனங்களைப் பகலிரவாகப் பாவிக்கும் சிந்தனையால் மனிதன் உள்ளம் பெருஞ் சூன்சிந்தை விட்டு திவ்யமான தேஜோமனஸோடு ஒன்றாகும் யோகசம்பத்தை யடைகிறான். இந்தத் தேஜோமனம் தானே "சிருஷ்டி ஸ்திதிவ்யஸன கர்மகிருத்" என்ற சுருதி வாக்கியப்படி, முத்தொழிலையும் சங்கல்ப மாத்திரத்தாலே யியற்றும் சக்தி வாய்ந்ததாகும். "தன்மனோ விலயம்யாதி தத்விஷ்ணோ பரமம் பதம்" என்ற சுருதி வாக்கியப்படி இந்த மனம் லயித்த இடந்தானே பரமபதம் ஆகும். அண்ட பிண்ட சமத்துவ ஞானத்தாலே அகம் புறமிரண்டும் ஒன்றாய் விளங்கும் ஸமரஸ ஞானம் பெற்றோர். "இராப்பகலில்லா விடத்தே, குரவஞ் செய்கின்ற குழலியையுன்னி" தர்மா தர்ம மிரண்டையும் விட்டுத் தானேதானாய்த் தன்மயமாய் எங்கும் நிறைந்து ஏகபரிபூரணமாய் விளங்கிக்கொண்டு, உலகுய்ய வழிகாட்டி நிற்பார்கள். இந்தப் பரமோத்தமர்களது கருணைகடாக்ஷத்தினாலேயே, இத்தேசத்திலுள்ள கோயில்களெல்லாம், லிங்காங்க சங்கமமாகிய தத்துவமஸி மஹாவாக்கிய உண்மையை, பாமரர் தம் பக்குவத்துக் கேற்றபடி காமியார்த்தமாய் உணர்த்தும்படிக் கட்டப்பட்டு உற்சவாதிகளும் காலதத்துவத்தை விளக்க நடத்தப்பட்டு வருகின்றன. இதை யுணர்த்த வேண்டியே, இந்த உத்தராயண புண்ய காலத்தின் தத்துவார்த்த உண்மையையெடுத்துக்கூறினோம். ஓம்தத்ஸத்.

---

## கமலாம்பாள் சரித்திரம்.

# STRAY LESSONS IN CIVICS.

## Our New Viceroy on 'Civic Responsibilities.'

"It will be my constant endeavour to keep a jealous watch over them (the Reforms) and to see that the object for which they were instituted is attained."—Viceroy's Repy to the Congress Deputation.

"Gentlemen, I am glad that the remarks I have made on one or two previous occasions, have given you satisfaction, for they are the sincere expression of the sentiments with which I have undertaken the responsible office I hold. It is my desire to secure the Co-operation of thoughtful men of the various communities of this great country, and, while your condemnation of lawlessness and violence justifies me in the confidence that I shall have your support in putting down any recrudence of disorder that may occur, it is a source of satisfaction to me to feel that I shall equally have your support in my endeavours to conciliate all races, classes and creeds. I trust that my attitude towards your aspirations and ideals may continue to commend itself to you and that the blessings of contentment and prosperity may be diffused throughout the land."—*The Viceroy in reply to the Calcutta Indian Association.*

## துரைத்தனப் பொறுப்புகளைப்பற்றி நமது இராஜப் பிரதிநிதியவர்கள் போதனை.



நமது புதிய இராஜப்பிரதிநிதி கனப்பொருந்திய லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள், இதற்குமுன் இந்தியா கவர்னர்-ஜெனரலாயிருந்த லார்ட் ஹார்டிஞ்சு அவர்களின் பேரப்பிள்ளை. இவர் உத்தியோகப்பொறுப்புள்ள சிந்தையுடையவர் என்று நன்றாய்க் காட்டியிருக்கிறார். காங்கிரெஸ் ப்ரெஸிடெண்ட் ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் அவர்களும் இன்னும் சில காங்கிரெஸ் பிரதிநிதிகளும் இவரை நேரிற்கண்டு முகமன் கூறிய பொழுது, இவர் கூறிய மறுமொழியில், இந்தியாவில் ஜனப்பிரதிநிதிகளுக்கு துரைத்தன காரியங்களில் ஒருவித பொறுப்பும் அதிகாரமும் உண்டாகும்படி சட்ட நிரூபண சபைகளில் ஜனப்பிரதிநிதிகளை நியமிக்கவும், கவர்ன்மெண்டு மந்திராலோசனை சபைகளில், ஒரு இந்தியரைப் பொறுப்புள்ள மந்திரியாக நியமிக்கவும் ஏற்பாடு செய்திருக்கிறார்களென்றும்; இந்தச் சீர்திருத்தங்கள் ஜனங்களுக்கு துரைத்தன காரியங்களில் பொறுப்புண்டாக வேண்டுமென்றும், துரைத்தனப் பொறுப்புக்குத் தக்கபடி அவர்களுக்கு துரைத்தன காரியங்களில் அதிகாரமுமிருக்க வேண்டுமென்றும் உத்தேசித்துச் செய்யப் பட்டிருக்கிறபடியால், அச்சீர்திருத்தங்களை அவர் மிகவும் உஷாராகவிருந்து பார்த்து வந்து, அவைகளின் நோக்கம் சிதைவுறாதபடி பார்த்து வருவது தன்னுடைய கடமையாகக் கொண்டு, அவர் உத்தியோகப் பொறுப்பை வகித்திருப்பதாகச் சொன்னார்.

இங்கேயொரு விஷயம் நாம் முக்கியமாய் வற்புறுத்திக் கூறவேண்டியதாயிருக்கிறது. இராஜப் பிரதிநிதியவர்கள் துரைத்தன சீர்திருத்தங்களின் நோக்கம் வீண்போகாதபடி அதிக விழிப்பாயிருந்து பார்த்துவரத் தீர்மானித்திருப்பதுபோல், ஜனங்களும், தங்களுடைய பொறுப்பை யுணர்ந்து, அரசியல் முறை தவறாது இராஜ்ய தர்மத்தைக் கடைப்பிடியாகப் பிடித்து நின்று, அரசு, குடி யிரண்டுக்கும் இடையே இருந்து துரைத்தன காரியங்களை நடத்தும் சிப்பந்திகளாக அமைந்துள்ள உத்தியோகஸ்

தர்கள் தங்களுடைய கடமையை மீறி நடவாமல் அதிக உஷாராகப் பார்த்து வரவேண்டும். இல்லாவிட்டால், இராஜப் பிரதிநிதியவர்களின் விழிப்பெல்லாம் வியர்த்தமாகவே முடியும். ஏனெனில், "தூங்கினவன் கன்று கடாக்கன்று" என்கிற பழமொழி உலகியல் பற்றிவந்தது. காலம் கலிகாலமாயிருப்பதால், கால தர்மத்தை யுத்தேசித்து, எல்லாரும் தர்ம சிந்தையோடுழைக்கக் கடமைப்பட்டிருக்கிறார்களென்பதை மனதிலிருத்திக் கொண்டு, "அப்படி யுழைக்கிறார்களா?" என்பதை ஊகமாய்ப் பார்த்துக்கொண்டு வரவேண்டும். உத்யோகஸ்தர்கள் செய்யும் சில்லரை அக்கிரமங்கள் பெரும்பாலும், ஜனங்கள் மௌட்டியத்தால் உண்டாகிறது. ஜனங்கள் தங்களுடைய ஸ்வதந்திரத்தை யுள்ளபடி யறிந்திருப்பார்களானால், உத்யோகஸ்தர்கள் அக்கிரமஞ் செய்யும் பொழுது அவர்கள் அக்கிரமச் செய்கைகளைக் கண்டுபிடித்து வெளியிடலாம். இதற்கு ஜனங்களிடத்தில் ஒற்றுமையும், ஜனப்பிரமுகர்களா யிருப்பவர்களிடத்தில் பொறுமையும் பொதுநன்மைக்காகக் கஷ்டப்பட்டுழைக்கும் தன்மையு மிருக்கவேண்டும். இந்த விஷயத்தில் ஜனங்களிடத்தில் குற்றம் சொல்ல வேண்டிய பாகம் நிரம்பவிருக்கிறது. ஆனால் அவர்கள் அறியாமை காரணமாகத் தவறிப்போகிறபடியால், அறிந்தவர்கள் அவர்களுக்குப் புத்தி சொல்லி ஒத்தாசை செய்யவேண்டும். இது ஜனப்பிரதிநிதிகளின் கடமையாம். சபைமெச்ச சட்டநிரூபணசபையில் பேசினால் மட்டும் போதாது. "நாடெங்கும்வாழக் கேடொன்றுமில்லை" யென்னும் பூர்வதர்மவசனத்தை நம்பி ஊரார் படுங்கஷ்டங்களை யெல்லாம் தன்னதாகப் பாவித்துப் பணம் சம்பாதிக்க எவ்வளவு ஊக்கத்தோடு பாடுபடுகிறார்களோ, அவ்வளவு ஊக்கத்தோடு பொது விஷயத்துக்கும் பாடுபட்டுழைக்க வேண்டும். இதுதான் "ஜனைத்தனப் பொறுப்பு" என்று சொல்வது. இது அரசன் முதல் ஏழைக்குடிவரையில் எல்லாரையும் பொறுத்தது. ஒவ்வொருவரும் இப்பொறுப்பைத் தன்னதாக வீகித்து வேலை செய்யவேண்டும். உலகப்பற்றுகளை யெல்லாம் விட்ட ஞானிகளையும் இந்தப் பொறுப்பு விடாது. ஏனெனில் அரசியல் கோணினால், இல்லறம், துறவறம் இரண்டும் கெட்டு "அறன் வலி" குன்றிப்போம். இதை நமது இராஜப் பிரதிநிதிபவர்கள் நன்றாக வுணர்ந்திருக்கிறதாகக் காட்டினர்.

மற்றொரு சமயத்தில் கல்கத்தா இந்தியன் அஸ்ஸோஸியேஷன் சங்கத்தார் இராஜப் பிரதிநிதிக்கு முகமன் கூறிய பொழுது, அவர்களுக்கு மறுமொழி கூறியதில் லார்ட்ஹார்டிஞ்ச் அவர்கள் சொல்லிய வசனங்களும் அவரது உள்ளக் கருத்துகளும் நாம் ஊகித்துச் சொன்னதற்கு உறுதியாக விளங்குகிறது. அவர் சொன்னதை யெல்லாரும் நன்றாக வுணரும் பொருட்டு மூலத்தில் கீழே இங்கிலீஷில் அச்சிட்டிருக்கிறோம். அதன் கருத்தும் மொழிபெயர்ப்பும் இது:—

"நான் முந்தி யிரண்டொரு முறைகளில் சொல்லிய வாக்கியங்கள் உங்களுக்குத் திருப்தியைத் தந்தனவென்று கேட்கச் சந்தோஷப்படுகிறேன். ஏனெனில், நான் சொன்னவை யெல்லாம், நான் உண்மையாக உத்தியோகப் பொறுப்பை வகித்த உள்ளக் கருத்துகளாயிருக்கின்றன. இந்த மஹாதேசத்திலுள்ள பல ஜனசமூகத்தார்களிலுமிருக்கிற "முனி புங்கவர்களுக் கொப்பான" யோஜனை மிகுந்த தீரர்கள் (Thoughtful men) உதவி யொத்தாசையையும் கூட்டுறவையும் துரைத்தன் காரியங்களில் நாடித் தேடியடைய விருப்புள்ளவனாயிருக்கிறேன். சட்ட விரோதமாகவும் சமாதானத்துக்கு விருத்தமாகவும் நடந்து கொள்வது பிசகென்று நீங்கள் கண்டித்துச் சொல்வதிலிருந்து குழப்பத்துக்குக் காரணமான

அக்கிரமங்கள் பின்னும் தலைகாட்டில், அவற்றை யடக்குவதற்கு நீங்கள் ஒத்தாசை செய்வீர்களென்று பூர்த்தியாக நம்புகிறேன். அஃதேயன்றி, இத்தேசத்திலுள்ள பலவேறு ஜாதி, மதஸ்தர்கள், வகுப்பார்களிடத்தும் நயப்பட நடந்துகொண்டு அவர்களை யெல்லாம் விநய பூர்வகமாய்துரைத்தனத்தாரோ டொத்துழைக்கச் செய்யும் முயற்சிகளிலும் நீங்கள் எனக்குத் துணையிருந்து அனுகுணமாக வுழைப்பீர்களென்று நம்பியிருக்கிறேன். உங்களுடைய உயரெண்ணங்கள் உத்தம லக்ஷியங்கள் சம்பந்தமாய் நான் கொண்டுள்ள இந்த மனோபாவமானது தங்களுக்கு எப்போதும் திருப்தியைக் கொடுத்து வருமென்றும், அதனால் தேசத்தில் ஜனங்களுக்குள் க்ஷேம விருத்தியும் மனத் திருப்தியும் பரவிவருமென்றும் நம்பி யிருக்கிறேன்.''

இராஜப்பிரதிநிதி யவர்களுடைய இத்தகைய உத்தம சங்கல்பங்கள் வீண் போகாதபடி பலனைத் தரவேண்டுமாயின், அவருடைய எண்ணம்போல் எல்லா உத்தியோகஸ்தர்களுடைய எண்ணமும் இருக்கும்படி அவர்கள் நடத்தையில் காட்டிவர வேண்டுமென்று எல்லா உத்தியோகஸ்தர்களுக்கும் தக்கபடி தாக்கீது செய்ய வேண்டும். இல்லாவிட்டால் இராஜப் பிரதிநிதி யவர்களுடைய எண்ணங்கள் பலித்துப் பயனைத்தராது, எத்தனையோ நல்லெண்ணங்கள் மின் மினிபோல் இராஜாதிகாரிகள்மனதில் தோன்றி மறைந்து பயனற்றுக் கழிந்தமைபோல், இதுவும் கழியும். எண்ணங்கள் சங்கல்ப ரூபமாய் வெளியிடப் பட்டால் அவைபெப்படியும் பலித்துப் பலனைத்தருமென்பதற்குச் சந்தேகமில்லை. இது மனோதர்மமும் ஆத்ம தர்மமுமாம். சங்கல்ப லக்ஷண மென்னவெனில், நினைப்புக்கெல்லாம் மூலஸ்தானமாயுள்ள சங்கல்ப க்ஷேத்திரத்தில் உதித்த எண்ணம், வாக்காய்ப் பிறக்கும் பொழுது, பரை, பச்யந்தி, மத்யமையென்கிற மூன்றும் ஒன்று படப் பொருந்தி அவைக்கேற்க வாயில்பிறக்கும் வைகரிவாக்கும் ஒத்திருக்கவேண்டும். இதற்குத்தான் திரிகரண சுத்தமான சங்கல்பமென்று பேர். மனோவாக்குக் காயம் மூன்றும் சுத்தமாயிருந்து சங்கல்பித்தால், அந்த சங்கல்பம் எப்படியும் பலித்துப் பயனைத்தரும். ரிஷிகளுடைய வாக்குப் பலிப்பதற்குக் காரணமும், அவர்களுடைய செல்வாக்குக்குக் காரணமும்இதுவே. "இருஷி கர்ப்பம் இராத்தங்காது'' என்று சகஜமாய்ச் சொல்லும் பழமொழியின் தத்துவார்த்தமும் இதுவே. இருஷிகள் எப்போதும் திரிகரணசுத்தியோ டிருப்பார்களாதலால், (அவர்களுக்கே பார்ப்பான், பார்வை, பார்ப்பன மூன்றும் ஒன்றாகப் பொருந்தி சங்கல்பாத்மக தரிசனம் சித்திக்கும்), அவர்கள் "கர்ப்பம்'' அதாவது ஸத்திய பூர்வகமாயுள்ள அவர்கள் நிர்விகற்ப மனதி லிருந்தெழும் கருத்து அல்லது எண்ணம் இருளடைந்து மருளுக்குக் காரணமான (அறியாமை காரணமாக வுண்டாகும் மயக்கம் குழப்பம் நிறைந்த) "இராத்தங்காது''—இருட்டறையில் தங்காது. அப்படியென்றால், பரவெளியில்தோன்றி உடனே பலனைத்தரும் சித்தர் வாக்காக விளங்கும்என்று அருத்தம். இப்படிப்பட்ட வாக்குசித்தி பெற்றவர்கள் வாக்கே, வாக்தேவியின் மஹத்துவத்தை விளக்குவதாயிருக்கிறது.

இந்த வாக்சித்திபெறக் காசுபணம் வேண்டியதில்லை. ஆனால் தானமும் தபஸும் வேண்டும். "தன்னைக் கொடுக்கும் தியாகமே தானம்.'' இதற்கு அதிஷ்டான தேவதை தியாகராஜர். "தானடங்கத் தன் சிருஷ்டியடங்க, மனமடங்க மாயைநீங்க, ஸர்வஸம்ஹார க்ஷேத்திரத்தில் ஆனந்தத்தாண்டவம் செய்பவரும், "அசைவற்று ஆட வல்லபவருமான'' நடராஜ மூர்த்தியே தபஸுக்கு அதிஷ்டான தேவதை. "தியாகம்,'' "நடம்'' இவ்விரண்டும் தானம், தபஸ் இவற்றின் தத்துவாதீத ஸ்வரூபங்களாம். இத் தத்தத்துவாதீதமானபொருளையே தியாகராஜர்

என்றும், நடராஜர் என்றும், அரங்கநாதர் என்றும் சொல்லி, லக்ஷிய லக்ஷணங்கள் பொருந்தக் கோயில்கட்டிப் பிரதிஷ்டைசெய்து நாம் கும்பிடுங் தெய்வங்களாம். இவைகளே இத்தேசத்தார் உண்மையாய்க் கொண்டாடும் உத்தம லக்ஷியங்களாம். இவற்றை யறியக்கூடியவர் யாவரே யாயினும் அவர் உண்மையில் இராஜாதிராஜனும் தேவாதிதேவனுமான நரஸிம்ம மூர்த்தியின் பிரதிநிதியேயாம். சிங்கத்தின் தீரம் விளங்கும் சங்கல்ப சக்தியும், கருணாரஸஸாகரமான மானுஷீகத் தன்மையும் நிறைந்தவர் எவராயினும் அவரை "இந்திரா தேவி" கரங்குவித்துக் கும்பிட்டு புநிதக்ஷேத்திரமான தன்னையாளும் க்ஷேத்ரஜ்ஞ மூர்த்தியாகக் கொண்டாடுவாள்.

இந்த வருஷம் நடராஜா தரிசனம் மார்கழி மாச முதலில் வந்த திருவாதிரை நாளிலும், அரங்கநாதர் தரிசனம், மார்கழி மாசம் கடைசியில் வந்த வைகுண்ட ஏகாதசி திதியிலும், பாரிலுள்ள பக்தர்களுக்கெல்லாம் கிடைக்கலாயிற்று. தியாகராஜருடைய ஊர்த்துவ தாண்டவ மஹா தரிசனம் இனிவரும் பங்குனி மாசத்து உத்தர நாளில் கிடைக்கும். அது திருவாரூர் க்ஷேத்திரத்தில் விசேஷமாம். மனுஷனுடைய ஆத்மா வேறு, மனம் வேறு, தேஹம் வேறு என்று இல்லாமல், மூன்றும் ஏகமேவாத்வி தீயமாயிருக்கும் ஒரே பரம்பொருளின் பரிணாம சேஷ பரிச்சேதமா யிருப்பதால், காரியத்தில் பங்குபோட்டுப்பேச இடமுண்டானாலும், உண்மையில் (உத்தமலக்ஷியத்தில்) மனம் பொருந்தியவர்களுக்கு) அவ்வித பேதத்துக்கு இடமில்லை.

ஓம்தத்ஸத்.

---

ஓம் ஸ்ரீ சாவித்திரியைநமஃ

## Sivayoga-Deepika.

## Chapter V.

### Part II. The Six States of Conseiousness.

### சிவயோகதீபிகையில் அமனஸ்க விதானமென்கிற ஐந்தாவது படலம்.

### 2. ஆறு அவஸ்தைகள்.

29 சகல இந்திரியங்களும் குணங்களுமில்லாதிருப்பதாய் சகல ரூபங்களுக்கு மதீதமானதாய் நிரஞ்சனமாய் சாந்தமாய், பாவாபாவங்களுக்கு மிகவும் அப்பாற்பட்டதான அவஸ்தையெதுவோ அதுவே ஸஹஜாவஸ்தையென்று சொல்லப்படும்.

30. ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரீயம் துரீயாதீதம், ஸஹஜம் (இந்த ஆறும் அவஸ்தைகளெனப்படும்.) இதற்குமேல் ஒன்றுமில்லையென்றறியத்தக்கது.

31. சகல துஷ்கர்மங்களையும் விட்டுச் சுபகர்மங்களைப்பிடித்து சுவர்க்கசுகத்தை அபேக்ஷித்த புருஷனானவன் பிரவிருத்தனென்று சொல்லப்படுவன். அவன் ஜாக்கிராவஸ்தைக் கதிகாரியாகமாட்டான்.

32. (இகலோக சுகங்களும் பரலோக சுகங்களுமாகிய) பதசுகங்கள் போதும் போதும் என்று அவையினிடம் அபேக்ஷையில்லாம விருப்பவனே நிவிருத்தனென்று சொல்லப்படும். அவன் ஜாக்கிராவஸ்தையி லிருந்துகொண்டு மோக்ஷ சுகத்தையடைய அதிகாரியாவான்.

33. இச்சம்சார சாகரத்தை எவ்விதம் கடப்பேன் என்று சிந்தித்து ஆசாரியரை சேவித்தலும், பெரியவர்களுடைய சகாவாசமும், அபேக்ஷையில்லாமலிருப்பதும், நல்ல ஆசார

மும், மௌனமும், வைராக்கியமும் (இவைகளுடனே கூடினதிலக்ஷகளோடும்) வேதசாஸ்திரங்களிலே நிச்சயமான புத்தியால் காமக்குரோதங்களாகிற சத்துருக்களை நாசஞ்செய்தலும், டம்பமில்லாமலிருத்தலும் இந்தக் காரியங்கள் யாதொரு புருஷனால் சாதிக்கப்படுமோ அவன் ஜாக்கிராவஸ்தையோடு கூடினவனாகி யோகாப்பியாசத்தை யடைகிறான்.

34. ஜாக்கிராவஸ்தையில் மரணமடைந்தவன் மறுஜன்மத்தில் பூர்வாப்பியாச வசத்தினால் இந்த பூமியிலே ஸ்வப்பனாவஸ்தையை யடைவன்.

35. இந்தப்படி ஸ்வப்னாவஸ்தையை யடைந்த யோகீசுவரன் சகல லோகங்களையும் சொப்பனம்போல் பார்த்துக்கொண்டு சித்தத்திலே சரத்காலத்து மேகத்தைப்போல் சத்தாமாத்திரமாக நின்று சஞ்சரிப்பான்.

36. சுழுத்தியவஸ்தையை யடைந்த யோகீசுவரன் துலுவத பாவங்களையெல்லாம் நீக்கி, மிஞ்சிநிற்கும் சாந்தத்தை வகித்து, பிரகாச ஸ்வபாவமாய், சிதானந்தமாகிய சூரியன் பிரகாசித்துக்கொண்டிருக்க பாஹியத்தில் விருத்திகளோடு கூடியிருந்தாலும் ஹிருதயத்தில் விருத்திகளற்றவனாய்ச், சித்திரப் பிரதிமைபோல் விளங்கிக்கொண்டிருப்பான். இது மகாச்சரியம்.

37. துரீயாவஸ்தையை யடைந்த யோகீசுவரன் பிழைத்திருந்தாலும் செத்தவனைப்போல் மனோவிருத்தி யில்லாதவனாய், சாந்தியைபடைந்து கந்தம் முதலிய குணங்களில்லாதவனாய் பாவனாகிதனாய் முக்தியை யடைந்திருப்பன்.

38. பின்னும் துரீயாவஸ்தையிலேயே யிருக்கும் யோகீசுவரன் சமுத்திர மத்தியிலே வைக்கப்பட்ட நிறைகுடம் போலவும் ஆகாசத்தில் நிறுத்தின சூன்ய கும்பம் போலவும் விஷ்ணு பதத்தில் உள்ளும் புறம்பும் கிரமமாக பூர்ண பாவத்தையும் சூன்யபாவத்தையும் அடைந்து சித்திரத்திலெழுதிய தீபத்தைப் போல் விளங்கிக் கொண்டிருப்பான்.

39. துரீயாதீதாவஸ்தையை யடைந்த யோகீசுவரன் பாஹியத்தில் லோகங்களில் சிலரால் பிரஹ்மாவென்றும், சிலரால் விஷ்ணுவென்றும், சிலரால் சிவனென்றும், சிலரால் சூன்யமென்றும், சிலரால் பிரகிருதி யென்றும், சிலரால் புருஷனென்றும், சிலரால் காலமென்றும், சிலரால் அர்த்த (பொருள்) ரூபியென்றும், இவ்விதம் நானாவித கற்பனைகளாகிய சொற்களாற் சொல்லப்பட்டும், தேகத்தோடு அவன் கூடியிருந்தாலும், அவன் நித்தியமுக்தனாய்ச் சுகித்திருப்பன்.

40. ஆகையால் நீயும் சகல பிரயத்தினங்களாலும் கிரமமாக அப்பியாசம் பண்ணி இந்த துரீயாதீதாவஸ்தையை யடைந்து சுகத்தை யடையக் கடவாய்.

41. (சகஜாவஸ்தை) சகலஅவஸ்தைகளையு மடைந்திருந்தாலும் சகல அவஸ்தைகளையும் நினையாமலிரு. மனதில் உள்ளும் புறம்புமுள்ள சகல பற்றுக்களையும் அடியோடு விட்டு விடு. [12]

42. அந்நியகர்மங்கள் எல்லாவற்றையும் விட்டு இச்சிவயோகத்தை யப்பியாசம் பண்ணு. சகஜமாய் சத்சித் மயமான [13] அமனஸ்கமென்கிற முத்திரையை யடைவாயாக.

43. ஆத்மாவையும் பிந்துவையும் ஆகாசமாகச்செய்து இந்த இரண்டையும் சமரசப்படுத்தினால் அதுவே அமனஸ்கமாகின(முத்திரை) யெனப்படும். (அதுவே கேசரீ யவஸ்தையென்றும், உன்மனீ யென்றும், அஜாட்யநித்திரை யென்றும் இபபடிப்பட்ட பரியாய நாமங்களாற் சொல்லப்படும்)

(12) கீழ்வரும் தமிழ் மொழிபெயர்ப்புப் பாடம் மூலத்திற்கு முரணாயிருக்கின்றது. "ஸகல அவஸ்தைகளையு மடைந்திருந்தாலும், சகலாவஸ்தைகளையும் மறந்திருந்தாலும் உள்ளும் புறம்பும் வியாபகமான சகல சங்கங்களையும் விட்டு விடு."

(13) "ஸ்வசம்வேத்தியமான" என்பது சில மொழிபெயர்ப்புப் பிரதிகளின் பாடம்.

44. ஓ ஸ்வாமி, ஜாக்கிர சொப்பனங்களை அதிக்கிரமித்து ஜனன மரணங்களில்லாமல், சிவ ஸ்வரூபமாகிய அமனஸ்கமென்கிற முத்திரையை எப்பொழுது அடையப் போகிறோம் (என்று கேட்ட சிஷ்யனுக்கு குரு மூர்த்தியானவர் வேறொரு பிரகாரமாக மனோ நிவிருத்தியைச் சொல்லுகிறார்.)

45. சராசரமாகிய சகல லோகமும் மனத்துக்கு திருசியமாகும். அம்மனம் உன்மனீ பாவத்தையடைந்தால் அது எவ்விதம் உண்மையாகிய மோக்ஷபதமாகாது.

46. அதெப்படியென்றால், மனம் எங்கெங்கே போகுமோ அங்கங்கே திருத்தி அது காரணமாக மனோலய மடையவேண்டும். அந்தப்படி மனதை (போக) விடாமல் தடுப்பதினால் [அதைத் தடுப்பதினாலே, வெள்ளத்துக்கணை போட்டாற்போல்] விஷயம் விருத்தியாகும்.

47. ஆகையினால் அந்த மனதை போக்கிலே விட்டால் யதேச்சையாய் திரிந்து தானே திரும்பி யதாஸ்தானம்† சேரும். அதெப்படி யென்றால், மதமடைந்த யானையானது அங்குசத்திற்குள் அகப்படாமல் இஷ்டப்படிதிரிந்து தானே தன்னிடம் திரும்பி யடைவது போலாகும்.

48. * லயத்தில் சிறந்தது நாதம். முத்திரையிலே சிறந்தது கேசரீ. யோகத்திற் சிறந்தது நிராலம்பம். அவஸ்தைகளிற் சிறந்தது மனோன்மனீ.

49. ஆகையினால் ராஜயோகத்தின் (சக்திரூபமான) இந்த மனோன்மனீ முத்திரையை யடைந்த யோகிசுவரன் பாலோன்மத்த பிசாசங்களைப்போல் சகல லோகங்களிலும் சஞ்சரிப்பான்.

† [மனதுக்கு உற்பத்தி ஸ்தானம் எதுவோ, அதுவே லயஸ்தானமுமா மாகையால், "தன்மனோவிலயம் யாதி தத் விஷ்ணோ பரமம்பதம்" என்ற சுருதி வாக்யத்தால் சூசிக்கப்பட்ட பரமபதமான பராகாசவெளியை "யதாஸ்தானம்" என்று குறிப்பிட்டுச் சொன்னார்.—வி-சி-ப.]

* 'லயக்கிரமத்தில்' என்பது அருத்தம்.

50. ஆகையினால் இந்த ஜீவன்முக்திப் பிரகாரத்திற்கு இதுவே யோகம். இதைவிட வேறில்லை. இதுவே மோக்ஷத்தைக் கொடுக்கத்தக்கதும் சமஸ்த தரிசனங்களுக்கும் சம்மதமானதும்.

51. மந்திரயோகம் லயயோக மிரண்டும் ஆரம்ப மாத்திரம். ஹடயோகம் அப்பியாசமாகும்; ராஜயோகம் மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியதென்று சொல்லப்படும். ஆகையால் (முந்தின மூன்றையும் பூர்வபக்ஷமாய் நிறுத்தி) இந்த ராஜயோக மொன்றே (மோக்ஷத்தைக்கொடுப்பதால்) மேன்மையானதாகும்—(கடைப்பிடியாகக் கொள்ளத்தக்கது.)

52. ஆகையால் யோகீசுவரனுக்கு மோக்ஷமடைவதற்கு இந்த ராஜயோகாப்பியாசம் செய்யவேண்டியது. இந்த யோகத்துக்கு விக்கினங்களாவன (இடையூறுகளாவன):—ஆலஸ்யம் (ஊக்கமின்மை), துஷ்டர்களின் சகவாசம், பந்துக்கள் சாஸ்திரங்கள் இவைகளின் வாசனை, ரோகங்கள் முதலியவை. இவை முதலானவெகு விக்கினங்களை யெல்லாம் ஜயித்து இந்த மகா யோகாப்பியாசத்தினால் பிறந்த (அணிமாதி) அஷ்டைசுவரியங்களையும் (காயம், வாதம் முதலிய) சித்திகளையும்விட்டு நல்ல தேசத்தில் சத்ஜனங்களால் சூழப்பட்ட (ராஜநிஷ்டரேங்களும்) உபாதிகளு மில்லாத தர்மராஜ்யத்திலிருந்து கொண்டு இந்த ராஜயோகத்தை யப்பியாசம் செய்யவேண்டும்.

53. இந்தப்படி ராஜயோகாப்பியாசம் பண்ணின மகாத்மாக்களுக்கு தாபத்திரயங்களும் நவ வித (பதார்த்த) வியவகாரங்களும், அரிஷட்வர்க்கங்களும், பஞ்சகோசங்களும், ஷட்பாவ விகாரங்களும், ஷடூர்மிகளும்,—இது முதலானவைகள்—இல்லவே யில்லை.

54. மகாப்பிரகாசமான அக்கினியானது பச்சை விறகையும் உலர்ந்த விறகையும் ஏகமாய் எப்படி யெரிக்குமோ அப்படியே ஞானக்

கினியானது க்ஷணமாத்திரத்திலே புண்யபா பங்களெல்லா வற்றையும் தகித்து பின்பு ராஜ யோக சித்தியை யுடையப் பண்ணும்; அப்படி யடைந்த மகாத்மா முக்தனுவான்.

55. அற்பமாகிய தீபமானது எப்படி மகத் தாகி திரண்ட அந்தகாரத்தை ஹடத்தாற் போக்குமோ அப்படியே இந்த ராஜயோக சமா தியானது கொஞ்சம் உண்டானாலும் சுபாசுப கர்மங்களெல்லாவற்றையும் போக்கும்.

56. இந்த ராஜயோகத்தை யாதாமொரு வன் அப்பியசிக்க எத்தனம் பண்ணி யோக சித்தியை யடையுமுன்னே இறப்பானுகில் அவ ன் *சுவர்லோகத்தை அடைந்து வெகுகாலம் சுகமனுபவித்து அதன்பின் பூமியில் ஐசுவரிய வான்களாய் வெகு சாஸ்திர சம்பன்னர்களாய் யோகிசுவரர்களாய் இருக்கும் சத்புருஷர்களின் குலத்திற் பிறந்து (பூர்வஜன்மாப்பியாச வசத் தால்) இந்த ராஜயோகத்தை சம்பூர்ணமாய் அப் பியசித்து சிவமெனப்படும் பரமபதத்தை யடைவான்.

57. இந்தப்படி ராஜயோகத்தினுல் எவ னுடைய மனதானது பரப்பிரஹ்மத்தில் லய மடையுமோ அவனுடைய தாய் தகப்பனிருவ ரும் கிருதார்த்தராவார்கள். அவனுடைய வம் சத்தில் பிறந்தவர்கள் யாவரும் மகாபுண்ய வான்களாவர். அவன் சஞ்சரிக்கும் பூமியானது அவன் பாதம் படுவதால் புண்ணிய க்ஷேத்திர மாகும்.

58. (இந்தப்பிரகாரம் சிவயோக மகத்துவம் சொல்லி கிரந்தகர்த்தாவானவர் இந்த கிரந்தத் தின் ஸ்வரூபத்தைச் சொல்கிறுர்):—

சகல யோக சாஸ்திரங்களின் ரகசியங்களை யும் சித்தபுருஷர்களுடைய சித்தாந்தத்தின் வழியையும் சோதித்து நிச்சயம் பண்ணி சுருக் கமாய் இந்த சிவயோகப்பிரதீபிகை யென்னும் கிரந்தம் செய்யப்பட்டது.

* 'சிவலோகம்' என்றும் பாடமுண்டு.

59. இந்த சிவயோக தீபிகையானது மகா ரகசியமானது. இதை யப்பியசிக்க வைராக்கிய முள்ளவனும், இந்திரியங்களை ஜயித்தவனும், சிவ னிடத்தும் குருவிடத்தும் சலனமில்லாத பக்தி யுள்ளவனும், இருப்பவனுக்குக் கொடுக்க வே ணும்; அல்லாமல் மூடனுக்குக்கொடுப்பானுகில் குருத்துரோகி யாவான்.

60. இச் சிவயோகதீபிகையானது "பரம" முதலிய சப்தங்களால் ஆரம்பிக்கும் அநேக விருத்தங்களால் அலங்கரிக்கப்பட்ட ஐந்து பட லங்களாகச் செய்யப்பட்டு "கிரிநாமாம்பக' என் கிற சங்கியையுள்ள (287) சுலோகங்களுடன் கூடியிருக்கும். அப்படலங்களின் சுலோகத் தொகை வரிசையாக "புபாணுன்" (53), "அஜ சாயகான்" (53), "சமுத்ராரிதான்" (64), 'சுரே ஷேன்" (52) "நிதிபாணன்" (69) என்னும் எண்களாகும்.

இவ்விதம் சதாசிவ யோகீந்திரரால் செய்யப் பட்ட சிவயோக தீபிகை யென்கிற யோகசாஸ் திரத்தில் அமனஸ்கவிதானமென்ற ஐந்தாம் படலம் முற்றும்.

சிவயோகதீபிகை முற்றுப் பெறும்.

மு. கோ. நாராயணஸ்வாமி ஐயர்.

# AIDS TO NATURE STUDY.

## *Elementary Botany and Study of Plant Life

Nature Study and Child Study—these two in their fullness and perfection complete the Education of Man. drawing out the Soul of man to the fullest extent possible and preparing him to work in tune with the Infinite."—*Guru Vak.*

" Nature Study by inductive method ought to occupy a prominent place in our Elementary Schools, as it will greatly strengthen the spirit of enquiry and improve the powers of observation in children."...*Extract from the author's Preface to the Elementary Botany.*

"The Bean plant was selected as the type of flowering plants . . . Prominence is given to the functional aspect; this standpoint of view is the most important one. Form and structure have no significience apart from their functions.' —*Extract from the author's preface to the Life of the Bean Plant."—in Tamil.*

* (1) Elementary Botany in Tamil by K. Rangachari, M.A., L.T., with 233 illustrations, Messrs. P. R. Rama Iyer & Co., Madras, 1-8-0 (2) Life of the Bean Plant in Tamil by the same author with 26 illustrations, & coloured frontispiece. Messrs. P. R. Rama Iyer & Co., Price As. 6.

## பிரகிருதி வித்யைக்குவேண்டிய சாதக சாதனங்கள்.

(விவேகசிந்தாமணி 309-வது பக்கத்தொடர்ச்சி.)

### V.

இப்படி, யெல்லாசாதகங்களினும் பரமசாதகமான மனப்பழக்கம் (Proper training of the mind) தீக்ஷாரூபமாக முன்காலத்தில் போதிக்கப்பட்டுவந்தது. இப்பொழுதும் உண்மையாளர் அவ்வழிபற்றியே போதித்துச் சாதித்து வருகிறார்கள். பொய்ம்மொழி பேசும் புன்மையாளரைப்பற்றி இங்கே நமக்கு விசாரமில்லை. ஒருகோட்டை தானியத்தில் ஒரு மணிநெல்லே யுள்ளதாயினும், அந்த ஒரு மணி நெல் தானே முளைத்துப் பல்கிப்பொருகிப் பலனைத் தருமன்றி, மற்றப் பதர்களெல்லாம் முளைக்காது—எருவுக்கே யுதவும்.

அதுபோல மனப்பழக்க மில்லாக் கற்றறிமூடர்கள் மனிதரிற் பதராவர். இப்பதரிலிருந்து மனித நெல்லைப் பொறுக்கியெடுத்து, விதைத்து, நீர் பாய்ச்சி, வளர்த்து, வியவசாயம் செய்து தீக்ஷையினால் மனப்பழக்கம் பெற்ற மணிகளான மன்குல திலகரை விர்த்திசெய்ய வேண்டும். இந்த மணிகளினால் தான் மன்குலம் விளங்கவுந் தவரித்த இப் பாரதவருஷம் விளங்கவேண்டும்.

மன்குலம் விளங்குதலாவது '(Progress of Humanity)" என்று, வார்த்தையின் அர்த்தம் தெரியாது இங்கிலீஷில் சொல்வதே. மன்குலம் (Humanity) விளங்குவது அருட்பேறொன்றினாலேயே யாகும். அருட்பேறின்றி நேர்வழி நடக்க வறியாது மன்குலம் அருளைவிட்டு அழியும்பொருளையே (Material Wealth) பெரிதாக நாடும் மேற்றிசைநாகரிக விர்த்தியால் மன்குலவிர்த்தி (Human Progress) சாணைப்பான் பூச்சி செக்கடியைச் சுற்றுவதுபோல் காலசக்கிரத்திலகப்பட்டுச் சுழன்றுழன்று வருகிறது. இதைமாற்ற மனப்பழக்கம் அவசியம் வேண்டும். அதுவே பரமசாதகம்.

### VI.

அந்தப் பரமசாதகம் அமையப்பெறச் சாதனங்கள் வேண்டும்.

அவைதான் இல்லப்பழக்கம் (Home influence) பள்ளிப்பழக்கம் (School influence) என்று சொல்லும் நல்ல படிப்புவாசனை.

"இல்லறமல்லது நல்லறமல்ல" ஆதலால் இல்லறம் வழுவாது நல்லறஞ்செய்துவரும் நற்குலத்தில் பிறந்த பிள்ளைகளுக்கே இல்லப்பழக்கம் நல்லதாயமையும்.

அரசியல் என்னும் பொதுவறம் வழுவாது செங்கோல் செழித்தோங்கும் இராஜ்யத்திலேயே பள்ளிப்பழக்கம் நல்லதாயமையும்.

ஏனெனில், "அரசனெவ்வழிக் குடிகளவ்வழி!" யென்பது பொய்யிலாப் பழமொழி.

இராஜதர்மம் பிசகினுல் துரைத்தனம் சீர்கெடும். இராஜ்ய தர்மம் என்பது "அரசியல் முறை"யெனும் "General and eternal Principles of Government" என்று இங்கிலீஷில் சொல்வதையே சொன்னதன்றி வேறல்ல. இந்த இராஜ்ய தர்மம் பிசகினுல் துரைத்தனம் (Administration of State) சீர் கெடும். துரைத்தனம் சீர்கெட்டால், அக்கிரம அநியாயங்கள் மலிந்து மிகும். அக்கிரம அநியாயங்கள் மலிந்து மிகுந்தால் பிரஜைகளுக்கு தர்மத்திலுள்ள நம்பிக்கையும் அதனுல் தர்மசிந்தையும் கெடும். தர்மசிந்தை கெட்டால் அரசியலுக் காதாரமாயுள்ள உயிர் நிலை குலையும். தர்மமே செங்கோல், தர்மபரிபாலனமே அரசுரிமை. தர்ம சிந்தையை வளர்த்தலே சிஷ்டபரிபாலனம். அதர்மத்தை யடக்குதலே துஷ்டநிக்ரஹம். அறன்வலி தானே (Righteousness or the Might of Right) அரசனுக்குப் படைவலிமை. மன்குல விருத்தியை நாடுதலொன்றே நாடு, ஸத்யமே ஜயம் என்பதே அரண். தர்மமே ஜயம் என்னும் ஆப்த வாக்கியமே யாராலும் அசைக்க முடியாத கோடி. இவையெல்லாம் பொருந்தச் சேர்ந்ததே அரசு.

இப்படியாகக் குடி, படை, நாடு, அரண், கோடி, அரசு, என்னும் ஆறு அங்கங்களும் அமைந்தது அரசியல். இந்த அரசியல் முறை தவறினுல் பள்ளிப்பழக்கம் நல்லதாகாது.

பள்ளிப் பழக்கம் நல்லதாகா விட்டால் இராஜ்யத்தில் பிறந்த பிள்ளைகளெல்லாம் கொள்ளிக் கட்டைகளாக ஆய்விடுமென்பதிற் சந்தேகமில்லை.

## VII.

ஆறு கரைபுரண்டால் அணைகோலி யடைக்கலாம். சமுத்திரமும் கரைபுண்டால் அதற்கு அணைகோலுவது எப்படி ?

அதுபோல மனுஷனுற்செய்த சட்டம் பிசகானுல் அதைத்திருத்தி விடலாம். ஸநாதனமான தர்மம் பிசகினுல், வருபயனைத் தடுக்க யாராலும் முடியாது, பகவானுலுங்கூட முடியாது. இதை ஸ்ரீ கிருஷ்ணபகவான் கீதையின் 8-வது அத்தியாயம் 18, 19, 20-வது சுலோகங்களில் அர்ச்சுனனுக்கு வெகு நன்றாய் எடுத்துரைத்து விளக்கியிருக்கிறுர்.

## VIII.

பிள்ளைப்பழக்கம் நல்லதாக வேண்டுமாயின் இந்திரியங்களெல்லாம் தீக்ஷண்யமாகத் தத்தம் வேலைகளைச் செய்யவேண்டும்.

1. கண் ஸ்தூல சூக்ஷ்ம காரணம் மூன்றையும் பார்த்துக் கிரகித்து பார்வையைத் தள்ளி பார்க்கப்பட்ட வஸ்துவையும் தள்ளித் தானே தானுய்த் தன்மயமாய்ப்பார்ப்பான் மாத்திரமாய் நிற்க வேண்டும்.

2. காதும் அப்படியே ஸ்தூலசூக்ஷ்மகாரணமான சப்தங்களைக்கேட்டு நாதானுசந்தானத்தில் பழகிக்கேட்ட சப்தம், கேள்வி யிரண்டையும் தள்ளிக் கேட்டவன் மாத்திரமாக நிற்க வேண்டும்.

3. மூக்கு (நாசி) ஸ்தூல சூக்ஷ்மகாரணமான மூன்றுவாசனைகளையும் முகர்ந்துணர்ந்து, மோப்பம், முகரப்பட்டவாசனை யிரண்டையுந்தள்ளி முகர்ந்தான் மாத்திரமாக நிற்கவேண்டும்.

4. இப்படியே துவக்கேந்திரியம் (தோல்) ஸ்தூல சூக்ஷ்ம காரணமான மூன்று ஸ்பரிசங்க

ளையும் உணர்ந்து ஸ்பரிசிக்கப்பட்ட பொருள், ஸ்பரிசம் இரண்டையும் தள்ளி ஸ்பரிசித்தான் மாத்திரமாக நிற்கவேண்டும்.

5. அஃதேபோல், நாக்கும் ஸ்தூல சூக்ஷ்ம காரணமான உருசிகளையெல்லாமுணர்ந்து ரஸிக்கப்பட்ட பொருள் ரஸனை யிரண்டையுந் தள்ளி ரஸித்தான் மாத்திரமாக நிற்கவேண்டும்.

இவை யெல்லாவற்றிலும் "தானேதானுய்த் தன்மயமாய்" என்பதைக் கூட்டிக்கொண்டு அர்த்தம் செய்து கொள்ளல்வேண்டும்.

அப்படியே வாய், கை, கால் முதலிய கன்மேந்திரியங்களும் அதததன் செய்தொழிலைச் செய்து தொழிலின் பலனைப் பற்றி நிற்காமல் அகமுகநோக்கிச் செயலின் அதிஷ்டான தேவதையைப்பற்றி நிற்கவேண்டும்.

இப்படி இந்திரியங்களைப் பழக்கும் விதம் இந்தியாவிலே தீக்ஷாவிதிகளாக வேற்பட்டுள்ளது மேற்றிசையில் ப்ரோபெல், பெஸ்டலோஜி (Frœbel, Pestelozi) இவர்களால் முறைப்றிந்து ஓதியுணரப் பெற்றிருக்கிறது. அவர்கள் உணரப்பெற்றதை யுணர்த்துவான் கிரந்தங்களும் இருக்கின்றன. ஆனுல் அவர்களுடைய உண்மையை உள்ளபடி உணரும் சக்திவாய்ந்த மாணவரும் போதகருந்தான் விசேஷமாயில்லை.

## IX

'ஸர்க்கஸில்' மிருகங்களைப் பழக்குவதுபோல் இந்திரியங்களைப் பழக்கினுல் பிரயோசனமில்லை. ("இயலிசை வித்வான்கள் தாரதம்மியம்" பார்க்க.)

காட்டு மிருகங்களையும் கரடி புலி பாம்புகளையும் அடிதடிப் பிரயோகங்களால் (அல்லது இன்னிசை மயக்கால்) அடக்குவது பெரிதல்ல; அடி தடிப் பிரயோகாதிகளால் அவற்றின் குணம் மாருது. வெறும் பழக்கம் மட்டும் ஏற்படும். மந்திர தந்திரோபாயங்களால் அவற்றின் குணத்தையே மாற்றிவிடலாம். பாம்புதானே பதஞ்சலி முனிவரானதும், வியாக்கிரம்தானே வியாக்ரபாத ரிஷியானதும், இதற்கு இதிஹாஸங்களாம். இதுதான் மனப்பழக்கம். யோக சாஸ்திரங்களில் இந்த மனப்பழக்கத்தையே "சித்த விருத்தி நிரோதனம்" என்று சொல்வர். இந்த "சித்த விருத்தி நிரோதன" சம்பத்தே, "யோக சித்தி" யென்றும் "ஞான ஸாதனம்" என்றும் "பரிபக்குவம்" என்றும் பலவாருகச் சொல்லப்படும். மனம்பழுத்தால், அது தானே நழுவி விழுந்து விடும். இப்படி மனம் பழுத்துத் தானுய் விழுவதே "வீடு,' முக்தி, மோக்ஷம் என்று சொல்வது. மனம் பழுத்தால், புளியோடுபோல் தேகமும் ஆத்மாவும் (அறிவும்) பிரிந்தும் பிரியாமல், ஒட்டாமலொட்டிக்கொண்டிருக்கும்.

இந்த உத்தமநிலை பெறுவது தான் "பெறற்கரிய பேறு." இந்நிலை யடைந்தவர்களே "எல்லாம்வல்ல சித்தர்களாவார்கள்." இதுவே வித்யாப்யாஸத்தின் பூரணமான பலன்.

## X.

இப்படிப்பட்ட பூரண பலனைத்தரும் வித்யாப்பியாஸம் பள்ளியில் தலையெடுக்கவேண்டியுழைப்பது விவேகிகள் எல்லாருடைய பொறுப்பும் கடனுமாயிருக்கிறது. இந்த வித்யையின் ஒருபகுதியான பிரகிருதிவித்யையில் பள்ளியிற் படிக்கும் சிறுவர்கள் மனஞ்செல்லுமாறு, அதற்குச்சாதனமாக தாவரநூல்என்றும், அவரையின் வாழ்க்கையென்றும் இரு நூல்கள் மிகவும் உபயோகமாகும்படி தமிழில் இயற்றிப் பிரசுரித்துள்ள கிரந்தகர்த்தாவுக்கும், அதை அச்சிட்டுப் பதிப்பித்த புஸ்தக கம்பெனியாருக்கும் தமிழுலகம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறது.

பொது லக்ஷணத்தை விரித்துரைக்க வேண்டிய தவசியமா யிருந்ததால், அவைதையே மிகவும்கூறி அப்"பொதுவியல்" கூறக்காரணமா

யிருந்து இந்நூலின் சிறப்பிலக்கணத்தைத் வித்தியார்த்திகள் வாங்கிப் படித்து தாமேயறிந்து கொள்ள வேண்டுமென்று விட்டதற்காக இதை வாசிப்போர் க்ஷமைபாராட்ட வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

## Last Days of Tolstoy.
## டால்ஸ்டாயின் துறவும் தேஹவியோகமும்.

"How is your wife? Is she a woman that will help you in your march towards God, or will she keep you tight in bondage?"—*Sri Ramakrishna Paramahamsa's first solicitude for "married men"* on the *Path.*

"Even if Tolstoy's ideal be accepted in principle, it should not be left for fulfilment until the shadows grow long. Men should sit down and think awhile, not only at the end of their days, but rather in their earlier years when the way of life is still uncertain."—*The (London) Times.*

"தேவியவள் புரம்விட்டுத் திக்கற்ற நாதன்போல் [ண்டு."
ஆவிதனையொடுச்சிக்கொண்டு அருந்தவங்கள்செய்துகொ

கௌண்ட் லியோ டால்ஸ்டாய் பேர்போன தத்துவஞானி. அவர் ருஷியா தேசத்தவர். மனச்சாக்ஷிக்கு விரோதமாய் நடக்க இஷ்டமில்லாதவர். அத்தேசத்துப் பிரபுகுலதிலராயினும் அவர் விரக்தி வைராக்கியத்திற் சிறந்தவர். அவருடைய மனைவியும் பிரபுகுலத் துதித்தவர். இவர்களுக்குப் பிள்ளை குட்டிகளும் ஆஸ்தி பாஸ்திகளும் மற்ற உலக சம்பத்துக்களும் நிரம்ப இருந்தும், டால்ஸ்டாய் அவர்களுக்கு அவற்றில் பற்றுதலில்லை. அவர் உள்ளம் அகத்துறவு பூண்டொழுகி அதில் முதிர்ந்த தானதால், உள்ளும் புறமும் ஒத்திருக்க வேண்டியது அவருக்கு அவசியமாக நேரிட்டது. ஆனால் அவர் மனைவி உலகப்பற்றுக்களை விட்டவளல்ல. இப்படி யிருவர் மனமும் ஒத்திராத காரணத்தால், டால்ஸ்டாய்க்கு வருத்தம் மிகவுண்டாயிற்று. ஆனாலும் எல்லாவற்றையும் பொறுமைக்குக் காரணமாக நினைத்து "வர்மமப்பா. வெல்வதில்லை" யென்றுன்னித் தான் உண்மை வழிப்பட்டு உள்ளன்பு பூண்டு, தன்னை வெறுத்த மனைவியை விருப்பு வெறுப்பின்றி உண்மையாய் நேசித்தொழுகி வந்தார். தம்பதிகள் மனமொத்திராவிட்டால், இல்லறம் சிறக்காதாகையால் துறவறமேமேலென்று நம்மில் பெரியோர்கள் வற்புறுத்தியிருக்கிறார்கள். பட்டணத்துப் பிள்ளையும், மஹா உத்தமியான தனது மனைவியின் உள்நோக்கம் தனது அபாரமான விரக்தி வைராக்கிய சித்தத்துக்கு ஒத்ததாயிராதென் றாகமாயுணர்ந்தே எல்லாவற்றையும்விட்டுத் துறவறம்பூண்டார். பிறவிஞானியாயிருந்தும் இல்லறம் பூண்ட திருவள்ளுவர், பக்குவனொருவன் அவரை யடைந்து "இல்லறம் நல்லதா துறவறம் நல்லதா'? வென்று கேட்ட பொழுது, தான் முற்றுந் துறந்த முக்தராயிருந்தும் இல்லறம் நடத்தும் பொழுது துறவறத்தைச் சிலாகித்தால் தன் வாக்குச் செல்லாதென்றுணர்ந்து, தனது மனைவியின் பரிபக்குவத்தை யுணர்த்த அவள் கிணற்றில் பாதிஜலம் இழுத்துக் கொண்டிருக்கும் பொழுது அழைக்க, அந்த அம்மாள் பதிசொல் காதில்விழவும், பாதிக்கிணறு வந்த தண்ணீர்த் தோண்டியை அப்படித்தானே யிருக்க விட்டுவிட்டு, உடனே வந்தார். அதைக் காட்டி, சந்தேகம் கேட்க வந்தவனுக்கு,—

"பர்த்தாவுக் கேற்ற பதிவிரதையுண்டானு
லெத்தாலும் மொத்து வாழலாம்-சற்றேனும்
ஏறுமாறாக இருப்பாளே யாமாயின்
கூறாமற் சநியாசம் கொள்."

என்று உண்மையை உள்ளபடி யுரைத்தனுப்பியது யாவருக்கும் தெரிந்ததே. ஸநாதனமான இந்தச் சத்தியவாக்கு டால்ஸ்டாய் விஷயத்தில் உண்மையாயிருந்தது. அவருக்கு வயது 82 க்கு மேலான போதிலும், அவர் தன் மனைவியைத் தன்வழிக்குத் திருப்பச்செய்த யத்தனங்களெல்லாம் பலிக்காது அவள் "ஏறுமாறாக விருந்தது" அவர் உள்ளத்திற் படவும், அவர் கூறாமற் சநியாசம் கொள்ளத் தீர்மானித்துச், சென்ற நவம்பர்மாசம் முதலில் அவருடைய வாசஸ்தலத்தைவிட்டு வெளிக்கிளம்பி ஆண்டி

யாய்த் தன் வாழ்நாளைக் கழிக்கத் தீர்மானித்தார். நடுநிசியில் எழுந்திருந்து தன் அரண்மனை போன்ற விடுதியை விட்டுத் தன் பெண்சாதிக்குத் தெரியாமல் பிரயாணப்பட்டு வெளியேறி விட்டார். வெளியேறினவர், பாவம்! வழியிலுண்டான களைப்பிளைப்புத் தாங்காமல், வயது முதிர்ந்தவரானதால், தேக உபாதி யுண்டாகி ரயில்பாதையிலுள்ள ஒரு ஸ்டேஷனிலிறங்கி, சிலநாள் வியாதியாயிருந்து, தன்பிராணனைவிட்டார். அவருடைய கடைசிப் பெண் கூடவேயிருந் துதவிசெய்தும், பெண்டு பிள்ளைகளெல்லாரும் அங்குவந்து கூடியும், பெரியவர் தன் விரக்தி வைராக்கியத்துக்குப் பங்கம்வராது, தேஹவியோகமெய்திப் பரகதி பெற்றார்.

ஞான மார்க்கத்தில் பிரவேசிக்கிறவர்கள் பெண்டு பிள்ளைகள் முதலான உலகப்பற்றுகளை அறவொழிக்க வேண்டுமென்பது, தேஹயாத்திரை பழக்கவாசனை மிகுதியால் நடப்பதாயிருப்பதால், அந்த வாசனையைத் தேஹத்தில் பலமுள்ள போதே மாற்றிக்கொள்ள வேண்டுமென்பது பற்றியன்றி, உண்மையில் பெண்டு பிள்ளைகளால் ஞானத்துக்குத் தடையுண்டாகுமென்றல்ல. ஞானம் திரிகரண சுத்தியாயிருப்பவர்களிடத்தே குடிகொண்டிருக்கும். "தந்தை தாய் தமர் சுற்றம்" உள்ளம் ஒத்த உத்தம பக்குவம் முதிர்ந்தவராயிராவிடில் உள்ளும் புறமும் ஒன்றாய் விளங்க வசிக்கவிடார்கள். ஏனெனில் இப் பொய்யுலகத்தில் பொய் வேஷம் போட்டே பிழைத்து ஆகவேண்டுமென்பது அவர்களுடைய கொள்கை. அக்கொள்கைக்கு விரோதமாய் நடந்தால் அவர்களுக்கு வருத்தமாயிருக்கும். விட்டுப் பிரியவும் மனசுவராது: ஒத்து நடக்கவும் பக்குவம் போதாது. இப்படிப்பட்ட தர்ம ஸங்கடத்துக் கிடங்கொடுக்கக் கூடாதென்றே "பர்த்தாவுக்கேற்ற பதிவிரதை" யுண்டானால் மட்டும் இல்லறத்திலிருந்து ஞானசாதனம் சாதிக்கலாமென்றும், இல்லாவிடில் முடியாதென்றும் சொன்னார். ஞானசித்தியில் ஆசைவைத்த முமுக்ஷு "முடியாது" என்கிற வார்த்தையைக் கேட்கமாட்டானாதலாலும், அவனுக்கு "முடியாதது" ஒன்றுமில்லையாதலாலும், ஸஹஜானுபவம் கைவந்த திருவள்ளுவர், மனைவி "சற்றேனும் ஏறுமாறாக விருப்பாளே யாமாயின், கூறாமற் சந்நியாசங் கொள்" என்று உண்மையை உள்ளபடி யுபதேசித்தார்.

அகப்பொருளில் லக்ஷியம் வைத்தோர் இகப்பொருளை மதியார். புறப்பொருளைப் பெரிதாக வெண்ணிய வுலகத்தார் அகப்பொருளின் அருமைபறியாராதலால், அவர்கள் ஞானிகள் வழிப்பட்டு நடப்பதும் துர்லபம். ஆதலால்தான் "உலகத்துக்கு ஞானி பைபத்தியக்காரன்" என்னும் பழமொழி ஏற்பட்டது. பித்தம் தலைக்கேறினால், அது பைத்தியம். உலகத்தார் பித்தத்தை (பிராணாத்மகனான சூரியன் ரஸ்மியை) வயிற்றில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அது அவர்களுக்குப் பசி தாஹம் என்னு முபாதிகளை யுண்டுபண்ணி, அன்னமய தேஹத்தையும் பிராணமய வுயிரையும் வளர்க்கக் காரணமாகிறது.

ஞானி பித்தத்தைத் தலையில் வைத்துக்கொண்டிருக்கிறான்: அதாவது பிராணாத்மகனான சூரியனை, மஹத் அல்லது புத்தியாத்மகமான ஷோடசகலா சந்திரனில் ஒடுங்கச்செய்து அந்தச் சந்திரனின் நித்தியமான குறைவுநிறைவற்ற ஸாதாக்கிய கலையைச் சிவபிரான் தலையில் வைத்திருப்பது போல், சுத்த தத்துவாத்மகமான தலைமுடியில் சூட்டிக் கொண்டிருப்பார்கள். ஆகையால் அவர்களைப் பித்தனென்றும், பேயனென்றும் சொல்வது உண்மையில் ஒக்கும்.

நிர்வாண தேசத்தில் கோவணங்கட்டியவன் பைத்தியக் காரனாவதுபோல், ஈஷணாத்திரியங்களால் நிறைந்துளோருலகில், உலகப்பற்றையும் ஈஷணாத்திரியங்களையும் விட்டவன் பைத்தியக்

காரனே. "தேஹோஹம்" என்கிற தேஹபாவனை கொண்டாடும் உலகத்தார் மத்தியில் "தேஹம் நான்" என்கிற பாவனையை அறவொழித்து நித்தமுத்த சுத்தனை "சிவன் நான்" என்று "சிவோஹம்" மாத்திரமாயிருப்பவர்கள் பைத்தியக்காரர்கள் என்பதற்குக் கேட்பானேன்?

பிரபஞ்சம் கீழ்மேலாகப் புறண்டு கொண்டிருக்கும் ஒரு பெரிய ஜாலவித்தை. கீழ்மேல் இரண்டையும் விட்டு எங்கும் நிறைந்து ஸர்வாந்தர்யாமியாய் நிற்பவர்கள் யாரோ அவர்களே ஞானியாவர். அவர்கள் பிரஹ்மவித் என்றும், வரன், வாரியன், வரிஷ்டன் என்றும் நால் வகைத்தாக விளங்குவர். பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மவித். இவன் எப்போதும் துரியஜாக்ராவஸ்தையிலிருந்து பிரஹ்மத்தைப் பூஜித்து வருவன். இவன் பூஜாபலத்தால் பூஜ்யன் ஆகிறான்.

பிரஹ்மவரன் ஜாக்ர ஸ்வப்னங்களிலும் பிரஹ்மத்தியானம் செய்து பகவானுக்குப் பிரிய சேவகனாகிறான். இவன் தியான பலத்தால் அடியான் ஆகிறான்.

வாரியன் ஜாக்ர-ஸ்வப்ன-சுஷுப்தியவஸ்தைகள் மூன்றிலும் பிரஹ்மத்தை யன்றி வேறு புகலிடமின்றிப் புதுமணஞ்செய்த புருஷனைப்போல், அஹம்புற மிரண்டிலும் தன் காதலியையே சாக்ஷாத்காரமாய்ப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

வரிஷ்டன் மேலவஸ்தைகள் மூன்றும் கடந்த துரியத்தில் துரியனாய் (அதாவது, துரியாதீதனாய்) பிரஹ்மத்தை இடையறாதனுபவித்துவரும் அனுபவாதீதனாயிருக்கிறான். அறிவழிந்த இவன் அனுபவசுகத்தைச் சொல்லமுடியாது. இவன் தான் "ஸஹஜன்." இந்த ஸஹஜானுபவமே முக்தி லக்ஷியம்.

ஓம்தத்ஸத்.



உ

ஓம் ஸ்ரீசாவித்திரியை நமஃ

# உபநிஷதர்த்த தீபிகை.

## 9. அத்யாத்மோபநிஷத்.

ஓம் பூர்ணமத இதி சாந்தி:

**ஹரி:** ஓம்—சரீரத்தினுள்ளே குகையில் (தகராகாசத்தில்) எக்காலமும் ஒருவர் இருக்கின்றார். அவருக்கு பிருதிவி சரீரம்; பிருதிவியினுள் சஞ்சரிக்குமெவரைப் பிருதிவி அறியவில்லையோ; எவருக்கு அப்பு (ஜலத்துவம்) சரீரமோ, ஜலத்தினுள் சஞ்சரிக்குமெவரை ஜலம் அறியவில்லையோ; எவருக்கு அக்நி சரீரமோ, அக்நியினுள் சஞ்சரிக்குமெவரை அக்நி அறியவில்லையோ; எவருக்கு வாயு சரீரமோ, வாயுவுக்குள் சஞ்சரிக்குமெவரை வாயு அறியவில்லையோ; எவருக்கு ஆகாயம் சரீரமோ ஆகாசத்தினுள் சஞ்சரிக்குமெவரை ஆகாச மறியவில்லையோ; எவருக்கு மனம் சரீரமோ மனத்திற்குள் சஞ்சரிக்குமெவரை மனம் அறியவில்லையோ; எவருக்கு புத்தி சரீரமோ புத்தியினுள் சஞ்சரிக்குமெவரை புத்தி அறியவில்லையோ; எவருக்கு அகங்காரம் சரீரமோ அகங்காரத்தினுள் சஞ்சரிக்குமெவரை அகங்கார மறியவில்லையோ; எவருக்கு சித்தம் சரீரமோ சித்தத்தினுள் சஞ்சரிக்குமெவரை சித்தமறியவில்லையோ; எவருக்கு அவ்யக்தம் சரீரமோ அவ்யக்தத்தினுள் சஞ்சரிக்குமெவரை அவ்யக்த மறியவில்லையோ; எவருக்கு அக்ஷரம் சரீரமோ அக்ஷரத்தினுள் சஞ்சரிக்குமெவரை அக்ஷரம் மறியவில்லையோ; எவருக்கு மிருத்யு சரீரமோ மிருத்யுவினுள் சஞ்சரிக்குமெவரை மிருத்யு அறியவில்லையோ; அவர் சர்வ பூதங்களுக்கும் அந்தராத்மாவானவரும் (அந்தர்யாமியானவரும்) பாபமற்றவரும் திவ்ய

ரும் (பிரகாசரூபரும்) ஏகருமாகிய தேவரான நாராயணர்.

2. ஆத்மாவல்லாத தேஹம் இந்திரியம் முதலியவைகளில் நான் எனது என்கிற புத்தியாகிய அத்யாசமானது * வித்துவானால் பிரஹ்மநிஷ்டையால் நீக்கப்படவேண்டும்.

3. புத்திக்கும் அதன் விருத்திகளுக்கும் சாக்ஷியானவனும், பிரத்தியகாத்மாவுமாகிய தன்னை அறிந்து (ஸோஹம்) நான் அவனேயென்கிற விருத்தியால் தனக்கன்யமானவைகளில் ஆத்ம புத்தியை விட்டொழிக்கவேண்டும்.

4. லோகத்தை அநுசரித்தலைவிட்டு, தேகத்தை அநுசரித்தலைவிட்டு, சாஸ்திரத்தை யநுசரித்தலை விட்டு உன்னிடமுள்ள அத்தியாசத்தை நீக்குவாயாக.

5. சுருதியாலும், யுக்தியாலும், ஸ்வாநுபூதியாலும் ஆத்மாவின் ஸர்வாத்மத்துவத்தை (சகலத்திற்கும் ஆத்மாவாய் இருக்கும் லக்ஷணத்தை) யறிந்து, தன் ஆத்மாவிலேயே சதாகாலமும் நிற்பதால் யோகிகளுக்கு மனம் நசிக்கும்.

6. நித்திரைக்கும், லோக வார்த்தைக்கும் (லோக வியவகாரத்திற்கும்) சப்தம் முதலியவைகளுக்கும் (விஷயங்களுக்கும்) ஆத்மாவின் மறதிக்கும் கொஞ்சமாவது இடங்கொடாமல் ஆத்மாவை ஆத்மாவினிடம் சிந்தனைசெய்.

7. சரீரமானது மாதாபிதாவின் மலத்தினின்றும் உத்பத்தியானது; மலமாம்சங்களால் நிறைந்தது. அதைச் சண்டாளனைப்போல் தூரத்தில் விடுத்து பிரஹ்மமாகி கிருதார்த்தனுவாயாக.

8. மஹாகாசத்தில் கடாகாசத்தை (லயம் செய்வது) போல் ஆத்மாவை பரமாத்மாவினிடம் லயஞ்செய்து அகண்டபாவத்தோடு (பூர்ணஸ்வரூபத்தோடு), ஓ முனியே, நீ எக்காலமும் மௌனமாய் இருப்பாயாக.

9. எக்காலமும் ஆத்மாவால் ஸ்வயம்பிரகாசமாகிய அதிஷ்டானம் தானேயாகி பிண்டாண்டத்தைப் போல் (சரீரத்தைப்போல்) பிரஹ்மாண்டத்தையும் மலஞ்சேர்ந்த பானையைத் (தள்ளுவது) போல் தள்ளிவிட வேண்டும்.

10. தேகத்தினிடம் ஏறியிருக்கும் நான் என்கிற புத்தியை சதானந்தமாக சித்ரூபமான (அறிவு ரூபமான) ஆத்மாவினிடம் வைத்து லிங்கத்தை* விடுத்து எக்காலமும் கேவலனுவாயாக.

11. எதனிடம் ஜகத்தானது கண்ணாடிக்குள் (தோன்றும்) நகரத்தைப்போல் தோற்றுகின்றதோ, அந்த பிரஹ்மம் தானென்று அறிந்து, ஓ மாசற்றவனே, நீ கிருதகிருத்தியனுவாயாக.

12. அஹங்காரத்தினின்றும் விடுபட்டவனுய், சந்திரனைப்போல் நிர்மலமாயும், பூர்ணமாயும், சதாநந்தமாயும், ஸ்வயம்பிரகாசமாயுமிருக்கும் தனது ஸ்வரூபம் அடையப்படுகின்றது.

12. கிரியையின் நாசத்தால் சிந்தையின் நாசமுண்டாகும். அதிலிருந்து வாசனுக்ஷயம் (உண்டாகும்).

13. வாசனுக்ஷயமே மோக்ஷம்; அதுவே ஜீவன்முக்தியென அங்கிகரிக்கப்படும்.

[குறிப்பு:—சிந்தை யென்றால் நினைவு என்றும், துக்கம் அல்லது வியாகுலம் என்றும் பொருள் சொல்லலாம்.]

* அத்தியாச மென்பது ஓர் வஸ்துவினிடம் இல்லாத குணத்தை அதினிடம் இருப்பதாக அறிதல்; பழுதையைப் பாம்பாகப் பார்த்தல் உதாரணமாகும்.

* லிங்கம் என்றால் காரியவஸ்து என்று பொருள். ஆகவே காரியமாகிய தேகங்களினிடம் ஆத்ம புத்தியைவிடுத்து அதிஷ்டானமாகிய பிரஹ்மத்தனிடம் வை என்று பொருளாகும். லிங்கம் என்றால் லிங்க சரீரம் என்று அர்த்தம் சொல்லலாம்.

14. சத்பாவத்தின் ('பிரஹ்மமே உண்மையிலுள்ளது' என்கிற) பாவனை ஸ்திரப்படுவதால், எங்கும் எவ்விதத்திலும் சகலத்தையும் பிரஹ்மமாகப் பார்ப்பதாகிய வாசனாலயம் உண்டாகும்.

15. பிரஹ்ம நிஷ்டையில் தவறுதல் ஒருக்காலும் செய்யக் கூடாது. (பிரஹ்ம) வித்தையினிடம் தவறுதலை பிரஹ்மஞானிகள் மிருத்தியுவென்று சொல்லுவார்கள்.

16. எவ்விதம் பாசியானது ஒதுக்கப்பட்டபோதிலும் க்ஷணமாத்திரங் கூட நிற்காமல் (ஜலத்தை) மூடுமோ அவ்விதமே மாயையும் பராமுகமாயிருப்பவனை (அஜாக்கிரதையாயிருப்பவனை) ஞானியாயிருந்தாலும் (மறைக்கும்).

17. ஜீவித்திருக்குமெவனுக்கு கேவலத்துவம் (சித்தித்திருக்குமோ) அவனுக்கு விதேகமுண்டானாலும் கேவலத்துவமுண்டு. ஆகையால், ஓ தோஷமற்றவனே, சமாதியில் ஸ்திரத்தை யடைந்து நிர்விகல்பனாவாயாக.

[குறிப்பு:—ஜீவன்முக்தனால் நிர்விகற்ப சமாதியினின்றும் அனுபவிக்கப்படும் அநுபவத்திற்கும் விதேக முக்தன் அனுபவத்திற்கும் வித்தியாசமில்லை. ஜீவன்முக்தனால் சமாதி கூடியநுபவிக்கப்படும் அனுபவம் விதேகமுக்தனால் எக்காலமும் எவ்வவஸ்தையிலும் சகஜமாய் அநுபவிக்கப்படும். ஆகவே அப்பியாச முதிர்ச்சியின் ஏற்றக் குறைச்சலால் வித்தியாசமேயொழிய, முடிவில் இருவரும் அநுபவிப்பது ஒன்றே. ஆகையால் பிரயத்தின பூர்வகமாய் நிர்விகற்பசமாதி யனுபவத்தை யடைந்தால் பிறகு ஞானி ஜீவாவஸ்தையைக்கடந்து ஜீவன்நசித்த விடமாகிய அருளவஸ்தையை யடைந்தவனாதலால், அவன் நடக்கை அருட்பாரமானபடியால், அருள் நடத்தியபடி நடந்து அவன் காலக்கிரமத்தில் விதேகமுக்தியாகிய சகஜாவஸ்தையை யடைவான். ஆகையால் நிர்விகற்பசமாதியடையும் பரியந்தமே புருஷப் பிரயத்தனத்திற்கு இடமாதலால் அதை முயன்று அடைய வேண்டியது முமுக்ஷுவின் கடனாகும். ஜீவன்முக்தியை சுத்த வாசனையாகிய அகண்டவிருத்தி ஸ்வரூபமான மனதின் ரூபநாசமென்றும், விதேகமுக்தியை வாசனாக்ஷய ரூபமான மனதின் அரூபநாசம் என்றும் லக்ஷணம் சொல்வதை யோகவாசிஷ்டத்திலும் பல உபநிஷத்துக்களிலும் பார்க்கலாம்.]

18. நிர்விகற்ப சமாதியால் அத்வைதாத்மாவின் தரிசனம் எப்பொழுதுண்டாகுமோ, அப்பொழுதே அஞ்ஞானத்தாலுண்டாகிய சகல ஹிருதயக் கிரந்திகளும் நாசமாகும்.

[குறிப்பு:—கிரந்தி என்றால் முடிச்சு, அதாவது கோணல், பொய், எனப் பொருளாகும்.]

19. அதனிடம் (பிரஹ்மத்தினிடம்) ஆத்மத்துவத்தை (அது தன் ஆத்மா என்னும் விருத்தியை) பலப்படுத்தி, 'நான்' முதலியவைகளில் (அகங்காரம் முதலியவைகளில் ஆத்மத்துவத்தை) விடுத்து, கடம் துணி முதலியவைகளில் போல் அவைகளிடம் உதாசினத்தோடு (பற்றுதலில்லாமல்) நில்லு.

20. பிரஹ்மா முதல் ஸ்தம்ப பரியந்தம் உபாதிகள் மித்தியா மாத்திர மானவைகள் (என்றறிந்து) பிறகு ஏகாத்மாவாக (எல்லாவற்றிலும் ஒரே ஸ்வரூபமாக) நிற்கும் பூர்ணமாகிய தன் ஆத்மாவைப் பார்க்கவேண்டும்.

21. பிரஹ்மா தானே, விஷ்ணு தானே, இந்திரன் தானே, சிவன் தானே, இந்த ஜகமெல்லாம் தானே, தன்னைவிட வேறொன்றுமில்லை.

22. தன் ஆத்மாவினிடம் ஆரோபிதமாயிருக்கும் சகல ஆபாஸ வஸ்துக்களையும் நீக்குவதால் தானே பூர்ணமாயும், அத்வைதமாயும், கிரியைபற்றதாயுமிருக்கும் பரப்பிரஹ்மமே தானாக (விளங்குகின்றான்).

[குறிப்பு:—"ஆரோபம்" என்பதும் முன் சொல்லப்பட்ட "அத்தியாசம்" என்பதும் ஒன்

றையே குறிக்கும். "ஆபாஸம்" என்ருல் தோற்றுதல் மாத்திரம்.]

23. ஏகமாகிய வஸ்துவினிடம் ஜகத்தென்னும் விகல்பமானது அசத்கல்பம். நிர்விகாரமானதும் நிராதாரமானதும் நிர்விசேஷமுமான பிரஹ்மத்தினிடம் பேதம் எவ்விதம் (உண்டாகும்.)

[குறிப்பு:—"அசத்கல்பம்" அசத் என்ருல் பொய், அசத்கல்ப மென்ருல் பொய்க்கு கிட்டதட்ட சமானமானது. நிர்விகாரம்=மாறுதலற்றது. நிராகாரம்=ரூபமற்றது. 'அசங்கல்போ' எனவும் பாடமுண்டு]

24-25. பார்ப்பவன், பார்வை, பார்க்கப்படும் பொருள் முதலிய (திரிபுடி) பாவங்கள் முழுதிலுமற்றதும், நிராமயமானதும் கல்பகாலத்துச் சமுத்திரம் போல் (பிரளயகாலத்துச் சமுத்திரம் போல்) பரிபூர்ணமா யிருக்கும் சிதாத்மாவினிடம் (அறிவுமயமான ஆத்மாவினிடம்) எதனிடத்தில் பிராந்தியின் (மயக்கத்தின்) காரணம் (ஆகிய அஞ்ஞானம்) பிரகாசத்தினிடம் இருளைப்போல் லயித்து (நசித்து) இருக்கின்றதோ, அப்படிக்கொத்த அத்வைதமாயும் நிர்விசேஷமுமான பரதத்துவத்தினிடம் பேதம் எங்ஙனம்?

26. ஏகாத்மகமான (ஏகஸ்வரூபமான) பரதத்துவத்தினிடம் பேதமானது எவ்விதம் வசிக்கக்கூடும்? சுகமாத்திரமாயிருக்கும் சுஷுப்தியில் (பூர்ணநித்திரையில்) பேதம் எவனுல் பார்க்கப்படும்? (ஒருவராலும் முடியாதென்றவாறு.)

[குறிப்பு:—"பேதகர்த்தா" என்றும் பாடமுண்டு. அப்பொழுது பேதம் செய்வோன் எங்ஙனம் வசிப்பான் என்று மொழிபெயர்க்கலாகும்.]

27. இவ்விகல்பம் சித்தத்தை (மனதைக்) காரணமாக வுடைத்து. சித்தமில்லாவிடில் (அது) கொஞ்சமுமில்லை; ஆதலால் சித்தத்தை பிரத்தியக் (ஆத்மா) ரூபமான பரமாத்மாவினிடம் சேர்க்கவும்.

[குறிப்பு:—'சேர்க்கவும்' என்பது மூலத்தில் "சமாதேஹி" என்று காணப்படும். "சமாதி" என்பதும் இதே தாதுவிலிருந்து தான் உற்பத்தி யாதலால் அதற்கு சேர்த்தல், ஒன்றுபடுத்தல் எனப்பொருளாகும்.]

(இன்னும் வரும்.)

மு. கோ. நாராயணஸ்வாமி ஐயர்.

——:-:——

## Kannaki—A Social Drama.

### கண்ணகி.

அங்கம் IV.] [காட்சி 3.

இடம்—மதுரையில் ஒரு கடைவீதி.
காலம்—பிற்பகல்.

பாத்திரர்— கோவலன். பொற்கொல்லன்.

கோவலன்:—(தனக்குள்) அதோ ஒரு பொற்கொல்லன் மிகுந்த ஆடம்பரத்துடன் செல்லுகிறான்! அவனைச்சூழ்ந்துகொண்டு நூற்றுக்கணக்கான பொற்கொல்லர்கள் போவதையும், அவன் செல்லும் காம்பீரத்தையும் பார்த்தால் அவன் அரண்மனை அந்தப்புரத்து ஸ்திரீகளுக்கு ஆபரணங்கள் செய்துகொடுக்கும் பொற்கொல்லனைப்போல் காணப்படுகிருன்! ஆதலால் நான் கொண்டுவந்திருக்கும் சிலம்பை இவனிடம் காட்டினுல் அதற்குச் சரியானவிலைஇன்னதென்றுசொல்லுவான்! (பொற்கொல்லனை நெருங்குகிருன்.)

பொற்கொல்லன்:—(கோவலனை நோக்கி) ஐயா; என்ன விசேஷம்?

கோவலன்:—ஐயா; என்னிடத்தில் ஒரு காற்சிலம்பு இருக்கிறது! அதனுடைய மதிப்பு இன்னதென்று சரியாய்ச்சொல்ல முடியுமோ?

பொற்கொல்லன்:—ஐயா; எனக்கு அவ்வளவு சாமர்த்தியம் இருக்குமோ; இருக்காதோ; நான் அறியேன்! ஆனுலும் நான் அரண்மனைக் கொல்லன்! சிலம்பைக் காட்டினுல் பார்த்துக் கூடியவரையில் சரியான மதிப்பைத் தெரிவிக்கக் காத்திருக்கிறேன்!

**கோவலன்:**—ஆனால் சரி; சந்தோஷம்! இந்தாருங்கள்! (சிலம்பைக் கொல்லன் கையில் கொடுக்கிறான்.)

**பொற்கொல்லன்:**—(சிலம்பினுடைய உயர்வைக் கண்டு ஆச்சரியப்பட்டவனாய்) ஐயா! உயர்ந்த மாணிக்கங்களும், வைரக்கற்களும், மரகதக்கற்களும், கண்ணைப்பறிக்கும் படியான பிரகாசத்தோடு கிளிச்சிறை என்னும் உயர்ந்த பசும் பொன்னில் அழுத்தப்பட்டு, அநேக அருமையான சித்திரவேலைகளோடு இலங்குகின்ற இந்தச்சிலம்புடைய மதிப்பை அளவிட்டுச் சொல்ல என்னால் முடியாது! ஆனாலும் இப்படிப்பட்ட சிலம்பை வாங்க யோக்கியதையுடையவர் அரசனுடைய பட்டமகிஷியே! ஆதலால் தங்களுக்கு நம்பிக்கையும் இஷ்டமுமிருந்தால் சற்று நேரம் இங்கேயே பக்கத்திலிருக்கும் என்னுடைய வீட்டில் தங்கியிருங்கள்! யான் அரசனுடைய அரண்மனைக்குச் சென்று அரசனுக்குத் தெரிவித்து அவருக்கு வேண்டியதாயிருந்தால் தகுந்த ரத்தின வியாபாரிகளை இங்கே அழைத்து வருகிறேன்! அவர்கள் மதிப்பிட்டு விலை சொல்லுவார்கள்! சிலம்பை ஜாக்கிரதையாக வைத்துக் கொண்டு இங்கேயே இருக்கிறீர்களா?

**கோவலன்:**—ஐயா; அப்படியே செய்யுங்கள்! நான் தாங்கள் வருமளவும் இவ்விடத்திலேயே இருக்கிறேன்! (கோவலன் அங்கேயே தங்கியிருக்கிறான். பொற்கொல்லன் அரண்மனை நோக்கிச் செல்லுகிறான்.).

[4- அங்கம் 3-ம் காட்சி முற்றும்]

நாகை ஸி. கோபாலகிருஷ்ணன்.

---

## Sita-A Tale of Hindu Domestic Life
## சீதா அல்லது இல்லறவாழ்க்கை.
### 33 – வது அதிகாரம்.

—:-:—

இராமச்சந்திரய்யர் சீதாவை நீ எப்படி காடன் துரையிடத்தில் உத்தாவு வாங்கினாய் என்றார். சீதா அவரை தான் நேரில்போய்ப் பார்த்ததாகவும் தான் சீதாதான் என்பதற்கு இராமச்சந்திரய்யர் கடிதங்கள் எல்லாவற்றையும் கொண்டுபோய்க் காண்பித்ததாகவும் துரைக்கு வேண்டியவரான ஒருவரும் சீதாதான் என்று அவருக்குச் சொன்னதாகவும் அதன் பேரில் துரையும் அந்த கோளாறுக்கு சந்தோஷப்பட்டு கேள்விகள் கேட்கவேண்டிய விதமும் தான் இன்னாரென்று எப்போது சொல்லுகிறதென்ற விபரமும் எல்லாம் துரையே சொல்லித்தந்ததாகவும் சொன்னாள். எல்லாம் சொல்லிவிட்டு பிறகு சீதா நான் தங்களுக்கு ஒருலாபமும் உண்டுபண்ணி யிருக்கிறேனென்றாள். இராமச்சந்திரய்யர் அது என்னவென்றுகேட்க, சீதா துரை அதில் 2000 ரூபா தனக்கு வேண்டாமென்றும் தன்வேலையை நான் குறைத்துவிட்டபடியால் தான் 2000 ரூபா குறைத்துக்கொள்ளாமலிருப்பது நியாயமில்லையென்றும் சொல்லி ரூபா 2000 வாபீஸ் செய்ததாக அதை இராமச்சந்திரய்யரிடம் கொடுத்தாள். இராமச்சந்திரய்யருக்கு சீதாவின்மீது வெகு சந்தோஷம். சீதா எனக்கு ஜட்ஜி நீதான் என்றார். பிறகு இராமச்சந்திரய்யர் உன்னைத் தூக்கிப்போனது யார் என்றார். சீதா அது ஒரு பெரிய சரித்திரம் சொல்லுகிறேன் கேளுங்கள்:-

முன் நாராயண சாஸ்திரிகள், வெங்கட்டராம சாஸ்திரிகள், சுப்பய்யன் எல்லோரும் ஜெயிலிலிருந்து தப்பியோடிப்போனதாக தமுக்கு போட்டார்களே, அவர்கள் தப்பித்துக்கொண்டது நமக்காகத்தான். சின்னசாமி அய்யர் தப்பித்துக்கொண்டதும் நமக்காகத்தான். இவர்கள் எல்லோரும் ஒன்றுகூடி யோஜித்து என்னை படுக்கையோடே தூக்கிக்கொண்டு போய்விட்டார்கள். பிறகு நான கண்விழித்துக்கொண்டு பார்த்தேன். சங்கதியை அறிந்து அவர்களிடம் சகஜமாய் இருப்பதுபோல் பாசாங்குசெய்தேன். ஆனால் அப்போது எனக்கு அவர்கள் மீது இருந்தகோபத்தை என்னவென்றுசொல்வது! இருக்கட்டுமென்று பொறுத்துக்கொண்டுமிருந்தேன். அவர்கள் எல்லாரும் சங்கீத வித்வான்போல் வேஷம்போட்டுக்கொண்டு நாராயணசாஸ்திரிகள், சுப்பய்யன் இவர்கள் பாடுகிறதும் வெங்கட்டராம சாஸ்திரிகள் தாளம்போடுவதும் கிஷ்ணசாமியய்யர் சொம்பில் அரிசி வாங்குவதுமாக ஊர் ஊராய்த் திரிந்தார்கள். என்னை சமயல் செய்து போடச் சொன்னார்கள். நாராயணசாஸ்திரிகள் ஓர் தம்பூரு சம்பாதித்துக்கொண்டு அதற்கு துணி போட்டு வெகு அழகாய் வைத்திருந்தார். இது எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு நாங்கள் புதுப்பட்டி என்ற ஒரு பட்டிக்காட்டுக்குப் போனோம். அங்கே இருக்கும் ஜனங்கள் நிரம்ப கர்நாடகங்கள். அவர்களுக்கு சங்கீதமென்பதே தெரியாது. தம்பூர்

கூட பார்த்ததில்லை. நாங்கள் எல்லோரும்போய் அந்த ஊரில் தகுந்த தனவான் யாரென்று கேட்டோம். அந்தவூர் மணியம் வெங்கடேசய்யர் தகுந்த தனவான் என்றும் சொன்னார்கள். உடனே நாங்கள் அவர் வீட்டை நோக்கிப்போனோம். போனதும் அவர் நீ யாரென்று கேட்டார், நாராயணசாஸ்திரி நாங்கள் தஞ்சாவூர் என்றார். அவர் அப்படியா என்று சொல்லிவிட்டு என்ன வேண்டுமென்றார். நாராயண சாஸ்திரிகள் உங்களுக்கு சங்கீதம் வேணுமோ என்றார். அவர் சங்கீதமென்றால் ஏதோ சாமான்கள் என்று நினைத்துக்கொண்டு எங்கே எங்கே அந்த மூட்டையை அவரும் பார்ப்போம் என்றார். நாராயணசாஸ்திரிகள் சங்கீதம் என்றால் மூட்டையா நன்றாய் இருக்கிறதே என்றார். அவர் பின்னே என்ன ஓய் அந்த சாமானை யெடுமே என்றார். நாராயணசாஸ்திரிகள் சாமான் இல்லை. பாட்டு என்றார். அதற்கு அவர் கோபித்துக்கொண்டு என்ன ஓய் நினைத்து நினைத்து பேசுகிறீர்கள் போம் என்றார். நாங்களெல்லாம் போய்விட்டோம். கொஞ்சம் தூரம் போனபிறகு அவர் தம்பூரு கொண்டுபோன நாராயண சாஸ்திரிகளை பார்த்து ஓய் நீளமே நீளமே என்று கூப்பிட்டார். நாங்கள் திரும்பிப் பார்க்க, உங்களைத்தான் நீளமாக ஏதோ வைத்து கொண்டிருக்கிறீர்களே அதற்கு உங்களை கூப்பிட்டேன் இங்கே வாருங்கள் என்றார். நாராயண சாஸ்திரிகள் போய் ஏனய்யா கூப்பிட்டீர்கள் என்றார். நாங்களும் கூட இருந்தோம். அவர் என்பெண்சாதி உங்களை கூப்பிடுகிறாளய்யா உங்களிடம் புல்லாக்கு வாங்கவேணுமாம் என்றார். நாங்கள் உள்ளேபோய் அந்தம்மாளிடம் என்ன வேண்டுமென்று கேட்டோம். அந்தம்மாள் உங்களிடம் சங்கீதம் தானா வியாபாரம், புல்லாக்கு இல்லையா என்றாள். நாங்கள் இல்லையம்மா ; எங்கள் சங்கீதத்தை கொஞ்சம் கேட்கவேண்டுமென்றுசொல்லி உட்கார்ந்தோம். நாராயண சாஸ்திரிகள் பாடுவதற்காக தம்பூரை நிறுத்தி உட்கார்ந்தார். அந்தம்மாள் அதை பார்த்து தம்பூர் துணிபோட்டிருந்ததால் அது யாரோ மனிதனென்று நினைத்துக் கொண்டு ஏனய்யா நீங்களெல்லாம் உட்கார்ந்து இருக்கிறீர்களே அவர் மட்டும் ஏன் நிற்கிறார் என்று தம்பூரை காண்பித்தாள். நாராயண சாஸ்திரிகள் இது தம்பூர் என்றார். தம்பூர் என்ற வார்த்தையை மட்டும் காதில் கேழ்க்க அவள் புருஷன் வெகுவேகமாய் ஓடிவந்து நாராயண சாஸ்திரிகள் முதுகில் ஒரு அறை அறைந்து ஏ பொலீச்கி என்னிடம் தஞ்சாவூர் என்று சொல்லிவிட்டு அவளிடம் தம்பூரென்று வேறு ஊர் பேர் சொல்லிகிறாயா என்றார். நாராயண சாஸ்திரிகளுக்கு சிரிப்பு ஒரு பக்கமும் பட்ட அடியால் வருத்தம் ஒரு பக்கமுமாக வந்து, அய்யா, தம்பூர் என்றால் இந்த வாத்தியத்துக்கு சொல்வது என்றார். அந்த பிராமணனிடம் இதற்குள் இரண்டு மூன்று போலீஸ் கான்ஸ்டேபில் வந்தார்கள். அந்த கிராமமுனிசீப் உடனே கான்ஸ்டேபில்களைப்பார்த்து அடே இவர்களைப் பிடித்துக் கொள்ளுங்கள். இவர்கள் சூனியக்காரர்கள் போலிருக்கிறது. நமதுவீட்டுள் ஒருபெரிய பொம்மையைக் கொண்டுவந்து சூனியம் வைக்கப் பார்க்கிறார்கள் என்றார். அவர் தம்பூரைத்தான் பொம்மையென்று சொன்னார். நான் உடனே இதுதான் சமயம் என்று கண்டு அவருடனே உள்ள சங்கிதியை சொல்லி கஜட்டில் காணுமென்று போடப்பட்ட பெண் நான்தானென்றும் உன்னைக் காண்பித்துக் கொடுத்தால் எங்களுக்கு ஐந்நூறு ரூபாய் கிடைக்குமென்றும் அவர்களையும் காண்பித்தால் சர்க்காரில் இனாம் கிடைக்குமென்றும் சொன்னேன். நாராயண சாஸ்திரிகள் அங்கேயே என்னை கொன்றுவிடப்பார்த்தார். நான் தப்பித்து கொண்டுபிறகு அந்த கிராம முனிசீபால் கூட்டிவரப்பட்டு இங்கே வந்ததும் கேஸ் இருக்கிறது என்று தெரிய வந்தது. உடனே யோசனை செய்துகொண்டு காடன் துரையிடம் போனேன். பிறகு நடந்தது தங்களுக்குத் தெரியுமென்றாள்.

இராமசந்திரய்யருக்கு இதை கேட்க வெகுஆச்சரியமா யிருந்தது. பிறகு நாராயணசாஸ்திரிகள் வெங்கட்டராம சாஸ்திரிகள் சுப்பய்யன் இவர்கள[illegible]லில் இருந்து ஓடி யொளித்ததற்காக மறுபடி அதிகமாக இரண்டுவருஷம் போடபட்டதாகவும்கிருஷ்ணசாமிய்யருக்கு திட்டேத்தி விட்டுவிடும்படி உத்தரவு ஆனதும் இராமச்சந்திரய்யருக்குத் தெரியவந்தது.

இராமச் சந்திரய்யர் கேசில்பொய்ச் சாக்ஷிசொன்னவர்களுக்கெல்லாம் விசாரணைநடந்தது. குற்றம் நன்றாய் விளங்கியது. ஜமீன்தாரைத் தவிர மற்றவர்க்கெல்லாம் 2-வருஷம் கடினக்காவல் போட்டார்கள். ஜமீன்தார் தெய்வசிகாமணிமுதலியார்பொய்சொன்னதாக காணப்படவில்லையென்றும் அவரைமட்டும் விடுதலைசெய்துவிட்டார்கள். இராமச்சந்திரய்யரைப்பார்க்க வேண்டுமென்று அவருடைய உறவினர்களில்பூலாவடியிலிருந்து ஒரு சாமி என்றவரும் அவர்பெண்ஜாதி

தேவியும் புறப்பட்டுப்போனார்கள். இவர்கள் இதுவரையில் பூவரசநல்லூருக்கு போனதே இல்லை. இராமச்சந்திரய்யர் மாமனார்தனக்கு போகசரிப்படவில்லையென்று அவரை அனுப்பினர்; அவர்கள்வரும்போது தன்பேரன் ராஜகோபாலனை கூட்டிவரும்படிசொல்லிஅனுப்பினார். இவர்கள் பூவரசநல்லூருக்கு எப்படிபோகிறதென்று எதிரில்வந்த ஓர் அம்மாளை கேட்க அவள் நீர் இன்னும் 18-மைல்போய் சேஷனை விசாரித்தால் தெரியுமென்றாள். அந்தம்மாள் கர்னாடக மானதால் ஸ்டேஷனென்பது வாயில் நுழையாமல் சேஷனென்றாள். சாமி அய்யர் சேஷன் என்பது ஒரு மனிதனென்று எண்ணிக்கொண்டே அந்த ஊர் போய் சேஷனைப்பார்க்க வண்டிபோகுமா என்றார். அங்கே ஒருவன் சேஷனிடம் கொண்டு போய் விடுவதாக ஒப்புக் கொண்டான். சாமி அய்யர் தேவி இருவரும் வண்டியிலேறிக் கொண்டுபோனார்கள். வண்டிக்காரன் வண்டியை நிறுத்தினதும் சாமி அய்யர் வண்டிக்காரனைப் பார்த்து சேஷன் எங்கெடா என்றார். வண்டிக்காரன் இதுதானென்று ஓர் பெரிய கட்டிடத்தை காண்பித்தான். சாமி அய்யர் அக்கட்டிடத்தைப் பார்த்து பெருமூச்சு விட்டுக்கொண்டு அடே அப்பா இவனா சேஷன். சேஷா நீ எத்தனை பெரியவண்டா எத்தனை உயரமடா என்றார். அங்கே ஓர் பெரியநதி ஓடிற்று. சாமிஅய்யர் பட்டிக்காட்டில் நதியேகிடையாது. எல்லாம் எத்துக்கிணறுதான். எத்துவைத்து இறைத்துத்தான் ஜலமெடுக்கவேணும். அவர் இந்த நதியைப் பார்த்ததும் ஆச்சரியப்பட்டுக்கொண்டு, அடேயென்சாமி, எவ்வளவு ஜலமடா ஆயிரம் எத்து வைத்தாலும் இந்தஜலம் இறைத்துமாளாதுபோல் இருக்கிறதேயென்றார். இவர் இப்படி யோஜித்துக்கொண்டு நிற்க, ஒருவன்வந்து ஓய் டிக்கட்டு வாங்கினீரா என்றான். உடனே சாமிஅய்யர்போய் டிக்கட்டு கொடுக்குமிடத்தில் எல்லோரும் கைவிடுவதைக் கண்டு தானும் கைவிட்டு, ஐயா இக்கட்டு இக்கட்டு என்றார். அவர் கோபித்துக்கொண்டு, என்னஓய் இக்கட்டாவது யாருக்கு இக்கட்டு, உங்கப்பனுக்கு இக்கட்டுவரட்டும்! பணத்தையெடு டிக்கட்டு என்று சொல் என்றார் சாமிஅய்யர் ஐயா டிக்கட்டுதான் எடும் எடுமென்றார். அவர் பணத்தை எடுங்கணும் பிறகு பேசலாமென்றார். சாமிஅய்யர் அய்யா எல்லாரும் கைநீட்டிக் கேழ்க்கிறார்களே என்னிடம் மட்டும் பணம் கேழ்க்கிறீரே, இனமாய் கொடுக்கக்கூடாதீர் என்றார். அவர் ஓய்முட்டாள்! எல்லாரும் பணம் கொடுக்கிறார்கள். உமக்கு என்ன டிக்கட்டு வேணுங்காணும் என்றார். சாமி அய்யர் ஐயா எனக்கு ஒரு ஆம்பளை டிக்கட்டு ஒரு பெம்பளை டிக்கட்டு வேணுமென்றார். அவர் கோபித்துக்கொண்டு எல்லாம் ஒரே டிக்கட்டுதான் என்றார். சாமிஅய்யர் ஆனால் இரண்டு டிக்கட்டு எடுங்களென்றார். அவர் எவ்விடத்துக்குங்காணும் டிக்கட்டு என்றார். சாமிஅய்யர் அகடத்துக்கு, அகண்டத்துக்கு என்றார். அவர் ஓய் ஆருக்குங்காணும் அகண்டது! ஸ்டேஷனைச் சொல்லும் என்றார். பிறகு சாமிஅய்யர் சாலூர் ஸ்டேஷனென்றார். அவர் பணத்தையெடும் என்றார். சாமிஅய்யர் எவ்வளவு என்றார். அவர் ஒருரூபா எடுமென்றார். சாமிஅய்யர் சொல்லித்தாருமென்றார். அவர் நீ 2-வது பேச்சுக்கிடையாது. போடும் ஒரு ரூபாயை என்றார். சாமிஅய்யர் என்னய்யா போக்குவண்டிக்குக்கூடவா ஒருரூபா கேழ்க்கிறது கொஞ்சம்குறைத்துத்தாரும் என்றார். அவர் கோபித்துக்கொண்டு ஓய் வெளியேபோம் என்கவும், சாமிஅய்யர் 1 ரூபா கொடுத்துவிட்டார். டிக்கட்டு வாங்கினதும் ஒருவன் மணியை அடித்துவிட்டு டிக்கட்டு வாங்கினவர்களெல்லாம் பிளாட்பாரத்துக்குப் போகலாமென்று கத்தினான். உடனே தேவி சாமி அய்யரைப்பார்த்து இதென்ன டிக்கட்டு வாங்கினவர்களெல்லாம் பாட்டு பாரத்துக்கு போகலாமென்கிறானே. ஒருவேளை பாட்டு பாடாதபோனால் உள்ளே விடமாட்டார்களோ என்னமோ என்றாள். சாமி அய்யர் ஆனால் பாடு என்றார். உடனே அவள் வெகு பலமாய்பாட ஆரம்பித்து விட்டாள். இப்படி இவள் பாடிக்கொண்டிருக்கும்போது ரயில்வந்து விட்டு புறப்பட்டு போய்விட்டது. ரயில் போனபிறகு சாமிஅய்யர் வெகு வேகமாய் ஸ்டேஷன் மாஸ்டரிடம் போய் என்னய்யா ஸ்டேஷன் மாஸ்டரவாள் ரயில் எப்போது வரப்போகிறது. சாவகாசம் இருக்கிறதோன்னோ என்றார். அவர் உமக்கு சாவகாசத்துக்கென்னய்யா குறைச்சல். ரயில் இப்போதுதான் போனது. நாளை இன்னேரம் வரையில் உமக்கு சாவகாசந்தானென்றார். சாமி அய்யர் உடனே வாயிலும்வயிற்றிலும் அடித்துக்கொண்டு அய்யா எனக்கு டிக்கெட்டு கொடுத்து என்னிடம் சொல்லிக்கொள்ளாமல் எப்படி நீர் வண்டியை விட்டீர். எங்கூர்தபால் வண்டியைவிட உம்மவண்டி வெகு ஓசத்தியோ! அவன் கூட நான் டிக்கட்டு வாங்கிவிட்டால், பாதிராத்திரியில் ஆத்தில் வந்து என்னை எழுப்புவானே! என் ரூபாயை கொடும். நானும் அப்

போ முதல் ரயில்வருமென்று உயர இருக்கும் தந்தியை பார்த்துக்கொண்டே இருந்தேனே. எங்கேங் காணும் ரயில்போனது! என்னிடத்தில் பொய்பேசுகிறீரா என்றூர். ஸ்டேஷன் மாஸ்டர் ரொம்ப நல்லவர் அவர் மறுபடியும் சாமி அய்யரை பார்த்து, ஓய் என்ன சுத்த கர்னாடகமாயிருக்கிறீர்! தந்தியில் ரயல் போகவாவது உமக்கு பைத்யமா, ரயில் கீழே அல்லவா போகுமென்றூர். சாமி அய்யர் பிறகு மறு ரயிலிலாவது போகலாமென்று அங்கேயே இருந்தார். மறுநாள் 12 மணி நேரமான பிற்கு ஓர் ரயில் வந்தது. ரயில் வந்த சமயத்தில் தேவி கக்கூஸுக்கு போய்விட்டாள். ரயில் ஊதிவிட்டது. மணியடித்துவிட்டார்கள். சாமிஅய்யர் இதைப்பார்தது, ரயில் போகப்போகிறது. சீக்கிரம் வாடியென்று கத்தினூர். தேவி, அவரைப்பார்த்து சித்தே இருக்கச்சொல்லுங்கோ இதோ சீக்கிரம் வந்துவிடுவாளென்று வண்டிக்காரங்கிட்ட சொல்லுங்கோ! என்றூள். கடைசியில் வண்டி நகர ஆரம்பித்தது.

சாமிஅய்யர் மறுபடியும் அடியேவாடி வண்டிபோகிறது சீக்கிரம் வா என்றூர். அவள், இதென்ன சனியன் அவனே கட்டேலாவக்கா அவனுக்கு என்ன அவசரம். டிக்கட்டு கொடுத்துவிட்டு அவன் வண்டியை விட்டுவிடுவனே என்றூள். சாமிஅய்யர் அடி வண்டி புறப்பட்டுவிட்டது. நேத்திக்கி டிக்கெட்டை கொடுத்துவிட்டு நம்மோடே சொல்லாமல் வண்டியை விட்டுவிடவில்லையா! இவர்கள் அயோக்யபயல்களடி சீக்கிரம் வா என்றூர். அவள், உங்களுக்கு ஒன்னும் தெரியவில்லையே உங்களை கேக்காதே, வண்டியை அந்த கட்டேலேபோவன் விட்டால் வண்டியை இழுத்துக்கொள்ளுங்களேன் என்றூள். இவ்வளவு சால்ஜாப்பும் அவள் கக்கூசுக்குள்ளவே இருந்து சொல்லிக்கொண்டிருப்பதற்குள் வண்டி புறப்பட்டுவிட்டது.

சாமிஅய்யர் பெண்டாட்டிசொல்படி. வண்டியை இழுத்துப்பிடித்தார். அது இவரையும் இழுத்தது. உடனே அவர் பெண்டாட்டியைக்கூப்பிட்டு அடியே சீக்கிரம் வா! நான் வண்டியை இழுக்கிறேன் அது என்னையும் இழுக்கிறது என்றூர். இதற்குள் போர்ட்டர் ஒருவன் அடே இதுயார் பட்டிக்காட்டு மனுஷன்! என்று சாமிஅய்யரை தூரத்தள்ளினூன். சாமிஅய்யர் ஏலே பணம் வாங்கிக்கொண்டு நீ என்னை இப்போ பட்டிக்காட்டு மனுஷனென்று சொல்லமாட்டியா! பணம் கொடுக்கும்போதுமட்டும் நான் பட்டணவாஸத்து மனுஷனே என்று சொல்வதற்குள் வண்டி போய்விட்டது. கடைசியில் சாமி அய்யருக்கு சமாதானம் சொல்லி ஒருவர் தன் விட்டுக்குக் கூட்டிப்போய் அவருக்கு ரயிலின் விபரங்களையெல்லாம் எடுத்துச் சொன்னூர். சாமி அய்யர் பிறகு அவருடைய ஒத்தாசையின்பேரில் பூவரசனல்லூருக்கு போய்சேர்ந்தார். அங்கே சீதா எல்லோரையும் பார்த்துவிட்டு அங்கேயே கொஞ்சநா ளிருந்துவிட்டு பிறகு வரும்போது இராமசந்திரய்யருடைய பிள்ளை ராஜகோபாலனைக் கூட்டிக்கொண்டு பூலாவாடிக்குப் போய்சேர்ந்தார். பூலாவாடியில் சாமி அய்யர் ரயிலில் போன கதை இன்னும் சொல்லிக்கொண்டிருக்கிறூர்கள்.

இராமசந்திரய்யர் இனி தனக்கு விசாரமில்லையென்று திருசசினூப்பள்ளியில் வெகுசிறப்பாயிருந்து வந்தார். அவருக்கு சீதாமீது முன்னைவிட இப்போது பதின் மடங்கு அதிக பிரியம் எற்பட்டது. இப்படி 1 வருஷமிருக்க பிறகு ஒரு நாள்சீதா உள்ளே ராத்திரி கட்டிலில் படுத்திருக்க விடிந்ததும், கட்டிலைப்பும் காணேம்,சீதாவையும்காணேம் இராமசந்திரய்யர் எங்கு தேடிப்பார்த்தும் அகப்படவில்லை. முன்போல தமது சத்துருக்கள் தூக்கிக்கொண்டுதான் போயிருக்கவேண்டும் என்று கடைசியில் ராமசந்திரய்யர் தீர்மானித்தார். இப்படியிருக்க, பூலாவடியில் தன் குழந்தையையும் காணேமென்று தந்திவந்தது. இராமசந்திரய்யர் என்ன செய்வார்! அவருக்கு எரிகிற ட்டம்பில் எண்ணெயைக் காட்ச்சிக்கொட்டினது போலிருந்தது. முன் ஒருவளைத் தேடவேண்டியிருந்தது. இப்போதோ இருவரைத் தேடவேண்டியிருந்தது. இராமச்சந்திரய்யர் தாயார் அய்யய்யோ பகவானே என் ஒருபிள்ளையையும் என் இப்படி கஷ்டப்படும்படிவிட்டு சோதிக்கிறீரென்று அழுதாள். கடைசியில் இராமச்சந்திரய்யர் அவர்களுக்கு எல்லாம் தைரியம் சொல்லிவிட்டு, ஊர் ஊராய்ப்போய் தேடிப்பார்த்து, கெஜட்டுகளிலும் அவர்களைக் கண்டுபிடித்துக்கொடுக்கிறவர்களுக்கு இனூம் கொடுப்பதாயும் பிரசுரம்செய்து, எப்படியாவது அவர்களைக் கண்டுபிடித்துக் கூட்டிவருவதாய்ச் சொன்னூர். பார்வதியம்மாள் தானும் வருவதாகச் சொல்ல அவர் உனக்கும் என் வீண் அலைச்சல் உன்னைக்கூட்டிப்போனல் எனக்கும் தேதேடமுடியாது. உன்னையும் கவனித்துக்கொண்டிருக்கவேணடும்: நான்மட்டும் போய்வருகிறேன்! ஆனல் வாரத்திற்கொருதாம் கடிதம் போடுகிறேனென்று சொல்லி சீதாவைத் தேடுவதற்குப் புறப்பட்டார்.

(இனும்வரும்.)

எஸ். ராமஸ்வாமிஐயர்.

-------:-:-------

# TEMPLE TRADITIONS.

## கோயில் புராணம்: "திருவூடல்*"

———:-:———

இத்தலைப்பின் கீழ் சிவனும் சக்தியும் அதாவது அறிவானும் அறிவும் ஒன்றுபட்டு அத்துவிதமாகக் கூடலும், கூடலுவகையினும் ஊடலுவகை பெரிதென்று, திருக்கலியாண மஹோற்சவமான மறுநாளே "திருவூடல்" கொண்டு விளையாடி, ஊடலும் கூடலும் உள்ளமொன்று பட்டவிடத்தில் ஒன்றேயாமென்று காட்ட, "பந்தம் பறியுற்சவம்" என்றும், "மட்டையடி" யென்றும் "திருவூடல்" விளையாட்டுக்காட்டி தம்பிரான் தோழரான சுந்தரமூர்த்தியடிகள் வந்து இருவருக்கும் ஊடல் தீர்த்தலும், மகத்தான தத்துவார்த்தமதை விளக்குவதாயிருக்கிறதென்று போன வருஷம் திருமயிலையில் நடந்த பந்தம்பறியுற்சவக்காட்சியைக்கண்டு உவந்து விவேகசிந்தாமணியில் விளக்கிக் காட்டினோம். அத்தருணத்தில் "ஓதுவார்" ஒருவரால் பரிவட்டங் கட்டிக்கொண்டு ஓதப்பட்டு வரும் திருவூடல் விளையாட்டுப் பாடல்களை ஸ்ரீமத் விசுவநாதக் குருக்கள் அவர்கள் ஏட்டுப்பிரதியாக வைத்திருந்த பண்டாரத்தின் கையேட்டுக் குறிப்பைக் கொணர்ந்துகாட்டி உளமகிழச்செய்தார். அப்பாடல்கள் இப்பொழுது யாழ்ப்பாணத்திற் பிரசுரமாகும் "ஞானப்பிரகாசம்" என்னும் பத்திரிகையிற்பிரசுரிக்கப்பட்டிருப்பதால், அதை யெடுத்து எல்லாருமறியக் கீழே பிரசுரிக்கிறோம்.—

திருச்சிற்றம்பலம்.

சுந்தரமூர்த்தி நாயனார் திருவுளக் குறிப்பின்படி சுவாமி சந்நிதானத்திற் பணிந்த மொழியும் தணிந்தநடையும் ஒதுக்கிய ஆடையும் புதைத்தவாயு முடையராய் வந்து, தமது ஆன்மநாயகராகிய சிவபெருமானுடைய சரணாரவிந்தங்களைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து அஞ்சலியஸ்தராய் நின்றாராக.

பண்—நேரிசை.

நம்பியாரூரன்வந்தான் நாவலூர்நம்பிவந்தான்  
உம்பராலறியவொண்ணா வுண்மைகளுரைப்பான்வந்தான்  
செம்பொனல்மதில்கள்சூழ்ந்த திகழ்செல்வந்திருவாரூரிற்  
றம்பிரான்றோழன்வந்தா னென்றனதாரைசின்னம்.

வசனம்.

சுவாமி சுந்தரமூர்த்திநாயனாரை அழைத்துத் திருவூடல் தீர்க்கும் திருவருட்குறிப்பாகப் பரிவட்டங்கட்டி விடுத்தருளும்பொழுது சுவாமி சந்நிதானத்திலே ஓதுகின்ற தேவாரம்:

பண்—கொல்லிக்கௌவாணம்.

பத்தூர்புக்கிரந்துண்டு பலபதிகம்பாடிப் பாவையரைக்கிறிபேசிப் படிறுடித்திரிவீர் [ரங்கீர்  
செத்தார்தமெலும்பணிந்து சேவேறித்திரிவீர் செல்வத்தைமறைத்துவைத்தீ ரெனக்கொருநாளி  
முத்தாரமிலங்கிமிளிர் மணிவயிரக்கோவை யவைபூணத்தந்தருளி மெய்க்கினிதாநாறுங்  
கத்தூரிகமழ்சாந்தும் பணித்தருளவேண்டுங் கடனாகைக்காரோண மேவியிருந்தீரே;

---

* யாழ்ப்பாணம் வண்ணைநகர் ஸ்ரீ. வைத்தீசுவர சுவாமி கோயிலிலே மார்கழி மாசத் திருவாதிரையிலே சந்நிதானத்திலே ஓதப்பட்டுவரும். [தென்னிந்தியாவிலுள்ள சிவன்கோயில்கள் பலவற்றிலும் இதுவே யோதப்பட்டு வருகிறது]

வசனம்.

இந்தத் தேவாரத்தைச் சுவாமி சந்நிதானத்திலே ஓதி விண்ணப்பஞ்செய்து நின்றபொழுது சுந்தரமூர்த்தி நாயனருக்குச் சுவாமி திருவுளம் பற்றுமாறு:—

முன்னே பரவையாருக்கும் உமக்கும் உண்டான ஊடலை நாமல்லவோ தீர்த்துவிட்டோம். நீரும் நம்முடைய ஊடலைப் போய்தீர்த்துப் பார்ப்பதியாரை (பார்வதியாரை) அழைத்துவாரும் என்று சுவாமி திருவருள் செய்தலும் தம்பிரான்தோழராகிய சுந்தரமூர்த்தி நாயனர் பார்ப்பதி (பார்வதி) தேவியார் சந்நிதானத்தை அடைந்து விண்ணப்பஞ்செய்து வினவி விடைகொண்டு ஓதுகின்ற

தேவாரம்.

பண்—கொல்லி.

ஒருத்திதன் தலைச்சென்றாளைக்கரந்திட்டா னுலகமேத்த
ஒருத்திக்குநல்லனுகிமறப்படுத்தொளித்துமீண்டே
யொருத்தியைப்பாகம் வைத்தா னுணர்வினைலேயுண்ணி
யொருத்திக்குநல்லனல்லனென்றியூருடையகோவே.

திருவிருத்தம்.

கற்றூர்பயில்கடனாகைக்காரோணத்தெங்கண்ணுதலே
விற்றாங்கியகரம்வேனெடுங்கண்ணிவியன்கரமே
நற்றாணெடுஞ்சிலைநாண்வலித்தகரநின்கரமே
செற்றார்புரஞ்செற்றசேவகமென்னைகொல்செப்புமினே.

வசனம்.

இந்தத் தேவாரங்களை ஓதிச் சுந்தரமூர்த்தி நாயனர் பாப்பதியாருக்கு விண்ணப்பஞ் செய்வது:—

அநாதிநித்திய சச்சிதாநந்த சோதிஸ்வரூபாகிய எம் இறைவர் செய்தருளும் சிருட்டிஸ்திதி சங்கார திரோத்பாவானுக்கிரகமென்று சொல்லப்படும் பஞ்சகிருத்தியாவசரத்தில் தேவரீரையன்றி அங்கொன்றுமில்லை. இன்னும் அப்பெருமானர் திரிபுரதகனம் செய்தருளும் பொழுதும் தேவரீர் விற்பிடித்து நிற்கவன்றே வெற்றியுற்றருளியது; ஆதலினல் எவ்வாற்றானுந் திருவுளமிரங்கி எம்பெருமான்பால் எழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து நிற்றலும், பார்ப்பதிதேவியார் சுந்தரமூர்த்தி நாயனரை நோக்கித் திருவுளம்பற்றுமாறு:—

எமக்குமொருத்தி எதிரியாகிச் சக்களத்தியாயினள். அவளுடன் நாம் வேறுபாடானேம் என்றார் என்றுஞ்சொன்னீர். ஆதலினல் நீரும் நல்ல வித்துவானேயாம். உமது கர்த்தாவும் மிகப்பெரியவரேயாம் இவைகளெல்லாம் உம்மிருவர்க்குமே ஒக்கும். நீர் அப்பாற்செல்லுமென்று சேடியருந் தாமுமாக ஆக்ஷேபஞ்செய்து பிடித்து வெளியே தள்ளிவிடுதலும், சுந்தரமூர்த்திநாயனர் சுவாமி சந்நிதானத்தை அடைந்து இவைகளையெல்லாம் விண்ணப்பஞ்செய்து வினவி ஓதுகின்ற தேவாரம்:—

பண்—சீகாமரம்.

மங்கைவாணு தன்மான்மனத்திடைவாடியூடமணங்கமழ்சடைக்
கங்கையாளிருந்தகருத்தாயதென்னைகொலாம்
பங்கயமதுவுண்டுவண்டிசைபாடமாமயிலாடவிண்முழ
வங்கையாலதிர்க்குமாயாத்தூரம்மானே,

பண்—கொல்லிக்கௌவாணம்.

பூண்பதோரிளவாமைபொருவிடையொன்றேறிப் பொல்லாதவேடங்கொண்டெல்லாருங்காணப்,
பாண்பேசிப்படுதலையிற்பலிகொள்கைதவிரீர் பாம்பினொடுபடர்சடைமேல்மதிவைத்தபண்பீர்,
வீண்பேசிமடவார்கைவெள்வளைகள்கொண்டால் வெற்பரையன்மடப்பாவைபொறுக்குமோசொல்லீர்,
காண்பினியமணிமாடநிறைந்தநெடுவீதிக் கடனாகைக்காரோணமேவியிருந்தீரே.

வசனம்.

இந்தத்தேவாரங்களை ஓதிநின்றபொழுது சுந்தரமூர்த்தி நாயனாருக்குச் சுவாமி திருவுளம்பற்றுமாறு:—நாம் தலையன்புகொண்டு இருவரையுங் ஒன்றாகவைத்துச் சமமாக நடத்துவோமென்று சொல்லி, எவ்வாற்றானும் சம்மதிப்பித்தது அழைத்துவாருமென்று திருவருள் செய்தலும், சுந்தரமூர்த்திநாயனார் பார்ப்பதிதேவியார் சந்நிதானத்தை அடைந்து வினவி ஓதுகின்ற தேவாரம்:

பண்—இந்தளம்.

கங்கையைச்சடையுள்வைத்தார் கதிர்ப்பொறியரவும்வைத்தார்
திங்களைத்திகழவைத்தார் திசைதிசைதொழவும்வைத்தார்
மங்கையைப்பாகம்வைத்தார் மான்மறிமழுவும்வைத்தா
ரங்கையுளனலும்வைத்தாரையனையாறனாரே.

வசனம்.

இந்தத் தேவாரத்தை ஓதிநின்றபொழுது பார்வதிதேவியார் திருவுளம் பற்றுமாறு:—என்னை ஒரு பாகத்தே வைத்தாரென்றும் எனக்கெதிராகக் கங்கையாளைச் சடையினிற் கரந்து வைத்தார் என்றும் சொன்னீர். ஆதலினால் என்னிலும் அவள் விசிட்டமுடையள். அவரினும் நீர் விசிட்டமுடையீர்; நீரும் நல்ல புத்திமானேயாம்; உம்முடைய கர்த்தாவும் மிகப் பெரியரேயாம் என்று வைதுரைத்துச் சேடியருந் தாமுமாக ஆக்ஷேபஞ்செய்து அப்பாற் செல்லுமாறு தள்ளி அடித்து வெளியே விடுத்தபொழுது, சுந்தரமூர்த்தி நாயனார் மகா மகத்துவம் பொருந்திய இருஷீச்சுவரர்களை அடைந்து இவைகளை எல்லாம் எடுத்துக் கூறி ஆகுமாறெவ்வாறென்று வினவியபொழுது அவர்கள் தம்முட்சிந்தித்துத் திருவுளம் பற்றுமாறு.

வாரீர் தம்பிரான் தோழரே! நீவிர் அறியாததொன்றுமில்லை. தோழமைப் பேறு கொண்டமையின் நீவிர் முன் தொண்டர்நாதனைத் தூதிடை விடுத்துப்பின் இப்பெருஞ்செயற் குரியருமாயினீர்.

நாம் இதனைச் சிந்தித்தற்குமுரியமோ. நீவிரும் கர்த்தாவும், உபநிடதங்களில் கேட்கப்படும் சில ஞானார்த்தங்களைப் புலப்படுத்தி உலகினர்க்கறிவுறுத்தவே, சாங்கியார்த்தமாயுள்ள இத்திருவூடலைச் செய்தருளினீர்கள். இதன் சூக்குமார்த்தம் மற்றையோர் மனோவாக்கிற் கெட்டாதது. இப்பரமரகசிய சாரமும் அவரருளால் ஒரு சிறிது எமக்கும் புலனாயிற்று. இதன் நுண்பொருள்களை விளங்க வைத்து நீவிர் தேவாரப் பதிகமொன்று அருளல் வேண்டும் என்றும் வேண்டிக்கொண்டு பின்னும் திருவுளம் பற்றுகின்றார்:—

ஆலாலசுந்தரரே, முன்னே கயிலையங்கிரியை இராவணன் தூக்கியபொழுது நிகழ்ந்தன நீவிரறியாததோ. சாமவேத பாராயணமே நல்ல உபாயமென்று கூறி விடுத்தார்கள்.

சுந்தரமூர்த்தி நாயனார் சுவாமி சந்நிதானத்தை அடைந்து ஓதுகின்ற தேவாரம்:

பண்—திருநேரிசை.

விண்ணினார்விண்ணின்மிக்கார்வேதங்கள்விரும்பியோதப்
பண்ணினார்கின்னரங்கள்பத்தர்கள்பாடியாடக்
கண்ணினார்கண்ணினுள்ளேசோதியாய்நின்றவெந்தை
மண்ணினார்வலங்கொண்டேத்துமாமறைக்காடனாரே.

பண்—கோல்லிக்கௌவாணம்.

ஆசுடையவகலல்குற் றாமொழியாளுடல் தொலையாதகாலத்தோர் சொற்பாடாய்வந்து [த்தீர்
தேசுடையவிலங்கையர்கோன் வரையெடுக்கவடர்த்துத் திப்பியகீதம்பாடத் தேரொடுவாள்கொடு
நேசமுடையடியவர்கள் வருந்தாமையருந்த நிறைமறையோருறைவீழி மிழலைதனில்நித்தல்
காசருளிச்செய்தீரின் றெனக்கருளவேண்டுங் கடனாகைக்காரோண மேவியிருந்தீரே.

திருநேரிசை.

கங்கைநீர்சடையுள்வைக்கக்காண்டலுமங்கையூடத்
தென்கையான்றேர்கடாவிச்சென்றெடுத்தான்மலையை
முன்கையானரம்புவெட்டிமுன்னிருக்கிசைகள்பாட
அங்கைவாளருளினானூரணிமறைக்காடுதானே.

வசனம்.

இந்தத் தேவாரங்களை ஓதி விண்ணப்பஞ் செய்வது:—

சுவாமி, புழுத்தநாயினுங் கடைப்பட்ட அடியேன் நம்மிருவருக்கும் வெறுப்புடையனாயினேன். ஆயினும் முன்னோர் காலத்திலே இராவணேசுவரன் கயிலையங்கிரியைத் தோள்கொண்டு தூக்கி நெரிவுற்றபொழுது, அவன் தன் தலையிலொன்றைக் கிள்ளி அதிலே நரம்பினைத் தந்திரியாகப்பூட்டி வீணை ஆக்கி அதிலே இசைநுணுக்கம் தோன்றச் சாமவேத கானஞ் செய்தது திருச்செவிசாத்தியன்றே, பார்ப்பதி தேவியார் திருவுளமிரங்கி மகிழ்ந்து அவனுக்கு அனுக்கிரகஞ் செய்தருளியது.

ஆதலின் தேவரீரும் சாமவேதகானஞ் செய்யின் தேவியார் திருவுளமிரங்குவர் என்று விண்ணப்பஞ் செய்தலும், ஊடலும் கூடலும் பயனும் ஊட்டுபவரும் யாவும் தாமேயாகிய காமாந்தக மூர்த்தி "தோழனே, அப்படியே ஆகுக" என்று அருளிக் கங்கையைச் சடையினுள்ளே சுவறக்காந்து வைத்துச் சாமவேதகானம் செய்தருளினார்.

இதற்குள் சுந்தரமூர்த்தி நாயனார் பார்ப்பதி தேவியார் சந்நிதானத்தை அடைந்து வினவி ஓதுகின்ற தேவாரம்:—

திருநேரிசை.

சூடினார்கங்கையாளைச்சூடியதுழனிகேட்டங்
கூடினாளங்கையாளுமூடலையொழிக்கவேண்டிப்
பாடினார்சாமவேதம்பாடியபாணியாலே
யாடினார்கெடிலவேலியதிகைவீரட்டனாரே.

இந்த தேவாரத்தை ஓதிச் சுந்தரமூர்த்தி நாயனார் விண்ணப்பஞ் செய்வது:—

அங்கயற்கணம்மையே, மரகதப்பூங்கொம்பே, அருட்கொடியே, ஒன்றே பலவுருவாமோதிமமே, ஆடவர் ஒழுக்கிறந்து இழுக்குறினும் கற்புடைமகளிர் பலருமறியத் தூற்றுதல் செய்யமாட்டார். பண்டே மாயோன் ஆயர்பாடியிலே கோடாலர் மனைவியரைக் கூடி அணைந்திருந்தும் இலக்குமிதேவி மனநிலை திரிவுற்றுப் பழிப்புரைகள் ஏதும் பகர்ந்தனளோ? இந்திரன் அகலிகையிடத்தில் மோகமுற்ற காரணத்தினால் மேனி எங்கும் கண்ணாகி நாணிவந்தபொழுதும் இந்திராணி நிந்தித்தேதும் உரைத்தனளோ? சந்திரன் குருதார கமனஞ் செய்து உடற் களங்கமுற்றுத் தேய்வுறுவது கண்டும் உரோகிணி வெறுத்து நீக்கி ஊடினாளோ?

ஆதலாற் தேவரீர் இவைகளைத் திருவுளத்தடைத்துத் திருவூடல் தணிந்து வேதசொரூபாகிய எம்பெருமான் சாமகீதம் பாடியருள்கின்றார்: திருச்செவிசாய்த்தருளுக என்று பிரார்த்தித்து நின்றார்.

### சாமவேதம்.

பராபர வஸ்துவாகிய எம்பெருமான் உபநிஷதார்த்தத்தை உலகியலில் வைத்தும் நடித்துக்காட்டும் நாடக முகத்தான் நம்மனோர்க்கு விளங்கிக்காட்டத் திருவுளங்கொண்டு பாடியருளிய சாமவேதகானவோசை திருச்செவிகளிற் சார்தலும் தேவியார் திருவுளமகிழ்ந்து தன் வசமழிந்து சுவாமி இடத்திலே எழுந்தருளி வந்து இருவரும் கூடித் திருக்காட்சிதந்து நிற்றலும் சுந்தமூர்த்தி நாயனார் ஓதுகின்ற

### தேவாரம்.

#### திருநேரிசை.

கூடினாருமைதன்னோடேகுறிப்புடைவேடங்கொண்டு
சூடினார்கங்கையாளைச்சுவறிடுசடையர்போலும்
பாடினார்சாமவேதம்பைம்பொழிற்பழனமேயார்
ஆடினார்காளிகாணவாலங்காட்டடிகளாரே.

#### திருத்தாண்டகம்.

முன்னமவனுடையநாமங்கேட்டாள் மூர்த்தியவனிருக்கும்வண்ணங்கேட்டாள்
பின்னையவனுடையவாரூர்கேட்டாள் பெயர்த்துமவனுக்கேபிச்சியானாள்
அன்னையையுமத்தனையுமன்றேநீத்தாளகன்றாளகலிடத்தாராசாரத்தை
தன்னைமறந்தாள்தன்னாமங்கெட்டாள்தலைப்பட்டாள்நங்கைதலைவன்றாளே.

#### திருவாசகம்.

தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதாயிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ.



## "The Sage and the Singer."

### "இயலிசைப்புலவர் தாரதம்மியம்."

[கீழேவருவதனால் சுத்த விவேகவிர்த்திக்கும், கேவல மனவசீகரசித்திக்குமுள்ள வித்தியாசத்தைநன்கெடுத்துக் காட்டியிருப்பதை அப்பியாசமார்க்கத்திலிருப்பவர்கள் அறிந்துய்ய வேண்டும். கேவலமான 'மனோவசியம்" மாயையை வளர்க்கும் உண்மையான "சித்தவிருத்தி நிரோதனம்" விவேகஞானத்தை விருத்தி செய்து யோக சாம்பிராஜ்யமாம் அபேத சித்தியையும் அகண்ட ஞானோதயத்தையு முண்டு பண்ணும். அநிர்வசநீயமான மாயாரூபமனதின் ரகஸியத்தை யறியவேண்டி மேற்றிசையார் மபக்காம் (Occultism) மாயாவித்தையில் மனம்படிந்து, மாயாவிகளை மஹாத்மாக்களென்று மயங்கி மருளுற்றுத் தெருளற்றுத் தியங்குகிறார்கள். இதைப்பற்றி இப்பொழுது தினசரிப்பத்திரிகைகளில் பிரஸ்தாபம் அதிகமாக நடந்து வருவதால் இரண்டுக்குமுள்ள தாரதம்மியம் விளங்கவேண்டியும் இவ்விஷயத்தில் இத்தேசத்தாருடைய பூர்வசுபவாசனை விளங்கவேண்டியும் இதை யிங்கேயெடுத்துப் பிரசுரிக்கலானோம்.]

இத்தலைப்பின் கீழ் வித்யாபாநு பத்திராசிரியர் பின்வருமாறு எழுதுகிறார்:—

வையங் காப்பவர் முதல் ஐயம்புகுபவர் ஈறாக எல்லாரிடத்தும் செவிவழிச் சென்று மனத்தட்புக்கு நல்லின்பம் பயப்பன இயலும் இசையுமேயாம். சொல்லும், பொருளும் எவ்வாறு ஒன்றோடொன்று பிணைந்து நிற்பனவோ அவ்வாறே சங்கீத சாஹித்யங்களும் பெரும்பாலும் பிணைந்து நிற்பனவாகும்.

ஓர் இசையைப் பாடுங்கால் ஒரு பாட்டும் வேண்டும். ஒரு பாட்டைப் பாடுங்கால் ஓர் இசையும் தானே வரும். ஆனால் சிறுபான்மை சொற்றொடரான்றி வெற்றொலி பரப்புதல் போன்று தனித்து இராகத்தை மட்டும் பாடிதலும் உண்டு. ஆயினும் பாட்டுடன் சேர்ந்த இசையொலியே விரைவில் மனத்தைக் குளிர்விக்கும். பாட்டைக்கொள்ளாத இசையொலி (இராகம்பாடுதல்) யுஞ் செவிக்கின்பம் பயப்பதுபோலவே இசையுடன் கலவாமல் தனித்தனி பிரித்துக் கூறப்படுஞ் சொற்றொடர்களமைந்த கவிகளும் அவற்றின் சொற்சுவையாலும் பொருட்சுவையாலும் மனத்தைக் கவர்ந்து இன்பமூட்டும் பெற்றித்தாம். அன்றியும், இசைக்கு ஆதாரமாகிய "சரிகமபதநி" என்னும் சப்தசுரங்களும் இயலின் வகுப்பைச் சேர்ந்தனவாகும். தனித்தாயினும், சேர்ந்தாயினும் இவ்விரண்டும் கேட்பவரை ஆனந்தத்தில் அழுத்திவிடு மென்பதில் ஐயமில்லை.

ஆனதுபற்றியே பண்டைக்காலமுதல் அரசர்களும் பிரபுக்களும் இயற்புலவர்களையும், இசைப்புலவர்களையும் நன்கு அபிமானித்து ஆதரித்து வந்தனர். தற்காலத்தும் பற்பல சம்ஸ்தானபதிகளும் பிரபுக்களும் இவ்விருவகைப் புலவர்களையும் பாதுகாத்து வருகின்றார்கள். இங்ஙனம் ஆதரிக்கப்படும் இவ்விருவகைப் புலவர்களும் செவிச்சுவை யளிப்பவரேயாயினும் இவருள் பெரிதும் தாரதம்மியம் முண்டு. என்னை?

சந்திரனில்லாத இராக்காலம் மயக்கத்திற் கேதுவாயிருக்கும்; இராக்காலமில்லாத சந்திரன் ஒளி மழுங்கி யிருப்பான் அதுபோலவே இயற்புலவரில்லாத அரசர் மயக்க முற்றிருப்பார். அரசரில்லாத இயற்புலவர் கீர்த்திபிறை யடங்கி யிருப்பார். ஆகையால் இயற்புலவருக்கு அரசரும், அரசருக்கு இயற்புலவரும் இன்றியமையாத் துணையாதல் விளங்கும்.

அன்றியும் புறப்பொருள்களை யெல்லாம் உள்ளவாறு காட்டுங்கண்ணைப்போல அகப்பொருள்களாகிய தருமார்த்த காம மோக்ஷமென்னும் புருஷார்த்தங்களை விளக்கிக் காட்டுவன இயல்நூல்களேயாம். ஆனதுபற்றியன்றே இயற்புலவர்கள் அரசர்க்குக் கண்போல்வாரென்று பண்டைநூல்கள் கூறுகின்றன. "கற்ற மாந்தரைக் கண்ணெனக் கோடலும்" என்பது சீவகசிந்தாமணி. இங்ஙனமாகிய இயலினது மேம்பாட்டைக் கருதியன்றே நூல்களை இயலிசை நாடகமென முத்திறப்படுத்திய முதியோர் முதலில் இயலைவைத்துக் கூறுவாராயினர்.

இசைப்புலமை நிரம்பிய எந்தப்பெரிய வித்துவானாயினும் சரி, அவர்பாடிய நல்லிசையால் அடையும் இன்பம் அந்த க்ஷணமே மறைந்துவிடும். அவர்பாடிய இசையொலியெல்லாம் காற்றொடு காற்றாகப் போய் விடுமேயன்றி வேறில்லை. பெரும்பாலும் இசையொலி காமத்தை வளர்விக்கும். மாணாக்கர்கள் இசைப்பாட்டின் விருப்பத்தால் தாம் தேறவேண்டும் பரீக்ஷைகளிற் றவறி வருந்துவதை நும்மவர் பலரும் காண்பாரன்றோ?

இயற்புலவர்கள் கூறிய செய்யுட்களின் பொருள்கள் கேட்பவர் மனத்திற் பன்னாள் நின்று நிலவும். அதுமட்டோ அக்ஷரவடிவிற்றாகி எத்தனை காலங்கட்குப் பின்னுற்றாரும் அறிந்து உய்தற்கு ஏற்ற துணையாகும். இதுபற்றியன்றே,

> "கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினு
> மலரவன்வண் டமிழோர்க் கொவ்வான்--மலரவன்செய்
> வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
> மற்றிவர் செய்யு முடம்பு."--என்றார்பிறரும்.

இராசநீதிகளையும், ஆசாராதிகளையும், வழக்கங்களையும், தெய்வத் திறத்தையும், புண்ணிய பாவ மோக்ஷ நரகாதிகளையும், சிவ ஞானத்தையும் யாவர்க்கும் உணர்த்தவதும், பூர்வசரிதங்களை விளக்குவதும் இவ்வியற் புலமையன்றோ? இத்தகைய உயர்வு தாழ்வுகளை யறிந்தே பூர்வ அரசர்களில் எத்தனையோ பேர், இயற்புலவர்கட்கு *முற்றூட்டாகப் பல கிராமங்களைத் தானஞ்செய்தும், பலபல ஆடை யாபரண வாகன முதலிய விசேஷ மரியாதைகளைச் செய்தும் பாதுகாத்ததுடன் தமக்கு முக்கிய மந்திரிகளாகவும், உயர்ந்த துணைவர்களாகவும், தம்மினுமிக்க மரியாதையுடன் எப்போதுந் தம்முடன் (இவ்வியற் புலவர்களையே) வைத்து, அவர்கள் சொல்வழிநின்று புவி புரந்து புகழ்புனைந்து வாழ்ந்தார்களென்பது புறநானூறு முதலிய பழைய நூல்களால் நன்கு புலப்படுவதாகும். இயற்புலவர் சொல்வழிநின்று யுத்தத்தையொழித்துச் சமாதானமடைந்தார் பலர். சிறைவிடுத்தார் பலர். இன்னும் பற்பல பெருங்காரியங்களை யெல்லாம் இயற்புலவர் சொல்வழியே அரசர்கள் செய்து வந்திருக்கின்றனர். இந்தப் புலவர்கள் பெருமையும், இவர்க்குதவிய மன்னவர் கீர்த்தியும், இப்புலவர்களியற்றிய இயல்நூல்களும் பல்லாயிரவருடங்கள் சென்ற பின்னும் யாவரும் அறிந்து பாராட்டுமாறு விளக்குதல் இன்னும் பிரத்தியட்சமன்றோ? எந்தப் பெருவேந்தர்களாவது இசைப்புலவர்கட்கு *முற்றூட்டாகப் பெரிய தானங்களைக் கொடுத்தனரென்றேனும், அவர்களை மந்திரிகளாகக் கொண்டு அவர்களாற் பெரியதோருதவி பெற்றனரென்றேனும், சரிதங்கள் கேட்டதுண்டோ?

பாணபத்திரருக்குப் பொருள்தரவேண்டித், திருவால வாயுடையார் சேரமான் பெருமாணயனாருக்குத் திருமுகப்பாசுரங் கட்டளையிட்டருளியதும், அத்தகைய பிறசில சரிதங்களும் இசைப்புலவர் மாட்டு ஈசுவராநுக்கிரகம் நிறைந்திருந்த தென்பதை விளக்

* முற்றூட்டு—சர்வசுதந்தரம்.

ருவனவன்றோ எனின், இவ்வாறாக இயற்புலவர்கட்குக கிடைத்த ஈசுவரானுக்கிரகங்களைக் கூறப்புகின் அவையொரு கடல்போற்பெருகு மென்க. என்புபெண்ணானதும், கீருங்கல் மிதந்ததும், நீற்றறை குளிர்ந்ததும், முதலைவாய்ப்பட்டு மூவாண்டு சென்றமைந்தன் உயிர்பெற்று மீண்டதும், திருவாலவாயுடையார் கிருமுகயில் மன்சுமந்து பிரம்படி கொண்டதும், அவர் திருக்கைலாய மலையிலிருந்து ஞான உலா முதலிய இயற்றமிழ் நூல்களைக் கேட்டு மகிழ்ந்தருளியதும், தம் அருமைத் திருக்கரத்தால் திருக்கோவையாரை எழுதியருளியதும், "அர்ச்சனை பாட்டேயாகு மாதலின் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" என சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் திருவாய் மலர்ந்து வலியவேண்டியதும் இவைபோல்வனபலவும் இயற்பாட்டின் பெருமையை விளக்குவனவன்றோ? இதுமட்டோ! சிவபிரான், முருகக் கடவுள், நாமகள் இவர்கள் சங்கப்பலகையேறி இயற்புலவராக வீற்றிருந்தமையும், முருகக்கடவுள் நக்கீரரிடத்தும், பொய்யாமொழிப் புலவரிடத்தும் வலியச்சென்று தம்மீது இயற்பாட்டை வேண்டி யடைந்தமையும், இடைக்காடன் என்னும் புலவர் திலகர் பிணக்கை நீக்குவான் திருவாலவாயுடையார் திருக்கோயிலை விட்டு நீக்கி வேற்றிடம்புக்கு வாழ்ந்தமையும், கச்சிப் பெருமாள் ஒரு புலவன் பின் சென்றமையும் இவை போல்வன பிறவும் இயற்புல்வர் பாலுள்ள ஈசுவரானுக்கிரகாதிக்கத்தைப் பசுமரத் தாணிபோல் நாட்டத் தக்கனவேயாம். அன்றியும் இயற்புலவருள்ளே சாபானுக்கிரக வாக்கிகளாக வாழ்ந்தார் பலராவர். ஒளவைப் பிராட்டியார், கம்ப நாட்டாழ்வார், காளமேகப் புலவர் முதலியவர்களின் அற்புத சரிதங்களைக் கூறப்புகின் அவை யொவ்வொன்றுமே யொருதனிப் புத்தகமாகு மன்றோ? இங்ஙனம் இசைப்புலவர்களுள்ளே சாபானுக்கிரக சீலர்களாக யாரேனு மிருந்தாரென்று யாண்டும் கேட்கப்பட்டதில்லையே. ஆதலின் கடவுளரை வசீகரிப்பிக்கும் சத்தி இசைப்புலமையைப் பார்க்கினும் இயற்புலமைக்கே மிக்கிருந்ததென்பதை எவரும் மறுக்கொண்ணாதென்க. நம்மைப்போன்ற மதப்பற்றுடையார்க்கு மட்டும் உவப்பையும் நம்பிக்கையையுந் தரும் இத்தகைய தெய்வத் தன்மைச் சரிதங்கள் ஒருபுறமிருக்க, யாவராலும் அங்கீகரிக்கப் பெற்ற சரித்திரவாயிலாக ஆராயப்புகினும் இயற்புலமையின் பெருமையே மிக்குத் தோன்றுவதாகும். தமிழ்நாட்டு வேந்தர்கள் இயற்புலவர்களை உயிர்த்துணைவராகக் கருதித் தம்மினும் மிக்குமதித்துத் தம் அரசும், கல்வியறி வொழுக்கங்களும், நியாயமும், வீரமும், கொடையும் இப்புலவர்களானே நிலைபெற்று வளர்வனவாகக்கொண்டு இவரைப் போற்றி வந்தனரென்பது சரித்திராராய்ச்சிக்குக் கருவியாய புறநானூறு முதலிய பண்டை நூல்களானே செவ்விதாக விளங்கும். இசையால் அடையு மின்பத்தை மனிதர்கள் வாயிலாகப் பெறுதலினும் அதிகமாகவே குயில் பூவை முதலிய பக்ஷிகளின் வாயிலாகவும், வீணை பிடில் முதலிய அசரப்பொருள்கள் மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம். இயற்பாவாற் பெறுமின்பமோ பெறுதற்கரிய மானுடப்பிறவி யுற்றோருள்ளும் கற்றுணர்ந்த மேன்மக்கள் வாயிலாகவே பெறவேண்டுமன்றி வேறில்லை. இதை நோக்குமிடத்து இசைக்கும் இயலுக்கும் உள்ள வித்தியாசம் பறவைகட்கும் மனிதருக்குமுள்ள வித்தியாசத்தை விடக் குறைந்ததன்றென்பதை மறுப்பவர் யாவர்?

இனி ஒருவர் மனத்தைத் தன்வசப்படுத்திச் சலனமறச் செய்யும் ஆற்றல் இசைக்கே அதிகமுண்டெனவும், பாம்பு முதலிய ஊர்வனவற்றையும், பறவைகளையும், யானை முதலிய விலங்கினங்களையும், அறிவு நிரம்பாத இளமகார்களையும் தன்வசப்படுத்துவது இசையே யெனவும், இவற்றை, "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல் யாழ்வரைத் தங்கி யாங்கு" என்னும் கலித்தொகையானும், "அணியிழை மகளிரும் யானையும் வணக்கு மணியொலி வீணை" என்னும் பெருங்கதையானும், "மகரயாழ் வல்ல மைந்த னொருவனைக் கண்ட மதப் புகர்முகக் களிற்றின்" என்னும் மேருமந்தர புராணத்தானும், பிறவும் பற்பல நூல்களானும் அறியலா மன்றோ எனவுங் கூறின் அது பொருளன்றென்க. என்னை? மனத்தைத் திருத்தி நல்லறிவை வளர்த்தலே பயனுடைத்தாமன்றி மனத்தை வசப்படுத்த லொன்றாற் பெறும் பயன் ஒன்றுமின்றே. கள் முதலி மயக்கும் பொருள்களும், பரத்தைய ரின்பமும் மனத்தை வசப்படுத்துவனவன்றோ? அவற்றை அதுகொண்டு பெருமைப்படுத்தக் கண்டிலம். மனத்தை வசப்படுத்திப் பயன் பெறச் செய்வதே சிறந்ததாமென்க.

## Agricultural Notes.

## வியவசாயக் குறிப்புகள்.

:-:

### மிளகு.



ளகுக்கொடியானது மலையாள தேசத்தில் ஒரு விசேஷமான பயிர். இது தற்காலத்திற்கூட மலைத்தொடர்களிலுள்ள உன்னதமான காடுகளில் யாராலும் பயிரிடப்படாமலே தானாயுண்டாகும் காட்டுச் செடிகளைப்போற் காணப்படுகிறது. இங்கேயிருந்து ஒரு கிசி

குடகு (Coorg) வைனாட் (Wynaad) பரியந்
தமும் மற்றொரு திக்கில் நேர்குறுக்கே சமுத்
திர பரியந்தமும் பரவி யிருப்பதுடன், மரங்
களடர்ந்த ஒவ்வொரு தோட்டத்திலும் ஒரு
சிறு மிளகுத்தோட்டம் வைத்துண்டாக்கப்பட்
டிருக்கிறது. மிளகுச்செடி பூர்வீகத்தில்
மலையாள தேசத்துப் பயிராகவே யிருந்த
தென்றாலும் அது மற்றப் பாகங்களுக்குப் பர
வித் தற்காலத்தில் ஆஸ்திரேலியா பரியந்த
முள்ள எல்லாத்தீவுகளிலும் ஏராளமாய்ப் பயி
ரிடப்படுகின்றன. இக்காரணத்தால் மிளகின்
முக்கிய வியாபாரஸ்தலம் இந்தியாவிலிருந்து
சிங்கப்பூருக்கு மாறி விட்டது. தலைச்சேரி
(Tellicherry) யைவிட சிங்கப்பூரில் நூறு
மடங்கு சரக்கு அதிகம் ஏற்றுமதி செய்
யப்படுகிறது. ஆனால் மலையாளதேசத்து
மிளகு, ஏற்றுமதியின் அளவில் பின் தாங்கி
விட்டபோதிலும், வியாபாரிகள் தலைச்சேரி
மிளகையே அதிசிலாக்கியமான தென்று இன்
னும் எண்ணுகிறார்கள். இது இந்தியாவின்
மேற்கு சமுத்திரக்கரையில் மாத்திரம் பயி
ரிடத்தக்கது.

இந்துதேச சரித்திரத்தில் மிளகின் சம்பந்த
மானது மிகவும் விசேஷமானதா யிருக்கிறது.
இந்தியாவின் தற்கால நிலைமைக்கு அனுகுணமா
யிருந்தது மற்றெல்லாப் பயிரையும்விட மிளகே
யென்று ஒரு வகையாகச் சொல்லவேண்டியதா
யிருக்கிறது. இந்தியாவைச் சுற்றிப் பார்த்து
ஆராய்ந்து போகவந்த ஐரோப்பியர்களுடைய
கவனத்தையும், ஐரோப்பிய வியாபாரிகளு
டைய முக்கிய கருத்தையும் முதல் முதல் கவர்
ந்தது இந்த மிளகேயாம். நன்னம்பிக்கை
முனையைச் (Cape of Good Hope) சுற்றி,
பெயர்பெற்ற கப்பல் யாத்திரைசெய்த வாஸ்
கோடிகாமா (Vasco de Gama) என்பவர்
மலையாள தேசத்துக்கு வந்ததும் மிளகின்
விலையை நயமாக்குவதற்கு வழி ஏதாவது
உண்டாவென்று கண்டுபிடிப்பதற்காகவே. மேல்
சமுத்திரக்கரையில் போர்ச்சுகல் தேசத்தார்
(Portuguese) குடியேறினதற்குக் காரண
மும் அதுவே. ஐரோப்பாவில், இந்த மிளகு
வியாபாரத்தில் வேறொருவருக்கும் யாதொரு
பாத்தியதையு மில்லாமல் தாங்களே ஏக
பந்தமாய் வியாபாரம் நடத்திவந்த டச்சுத்
தேசத்தார்கள் (Dutch) இதற்குப்பின்வந்த
கள். இவர்கள் மிளகின் விலையை உயர்த்தி
தினால் தான், தனவந்தர்களாகிய சில லண்ட
(London) வியாபாரிகள் ஒன்று கூடி இந்தி
வுடன் மிளகு வியாபாரம் நேரே செய்யத்
மானித்து ஈஸ்டு இந்தியா கம்பெனி (East I
dia Company) யென்று ஒருசங்கம் ஏற்ப
தினார்கள். ஆகவே இந்து தேச சரித்தி
திற்கே எப்போதும் ஒரு முக்கிய அடைய
மாயிருந்த [illegible] உள்நாட்டுக்கொடிர சண்
சச்சரவுகளை [illegible] பலநாட்டார்களை
ஒற்றுமைப்படுத்தி, ஒரே ஆளுகைக்குள்ளா
இத்தேசத்தை ஆங்கிலேயர் சுவாதீனமா
யாள மிளகே முதற்காரணமா யிருக்கிறது.

மிளகுச் செடிகளின் குண லக்ஷண
களை அறிந்து, அவைத விருத்திசெய்து,
குத் தோட்டக்காரர்களுக்கு உபகாரம்
யவேண்டுமென்றஎண்ணத்துடன்கவர்ன்மெ
டார் தாலிப்பரம்பா (Taliparamba) என்
மிடத்தில் மிளகு சாகுபடிசெய்ய ஒரு
ணையை ஸ்தாபித்தார்கள். மிளகுக்கொடி
நடுமுன்னே இன்னின்ன கிளைகள் நல்லதெ
றும், இன்னின்னவைகள் நல்ல பலன் தராதெ
றும் பகுத்தறிவது இப்போது மிக எளித
காரியமென்று தெரியவந்திருக்கிறது. இவ்வி
யங்களைக் குறித்து வேண்டிய சமாசாரங்
அறிய விரும்புகிறவர்கள், அந்தப் பண்
மானேஜர் அவர்களைக் கேட்டுக் கொண்ட
அவர் மிகச் சந்தோஷத்துடன் தெரிவிப்ப
நல்ல மாதிரிச் செடிகளையும் உபயோகமற்றவை
களையும் வைத்துப் பயிராக்கச்செல்லுஞ் செ
ஒன்றாகவே இருக்கும். நல்ல மாதிரியைப் பா
த்துத் தெரிந்தெடுங்கள். வேர்களைச்சுற்றிக்
ஞ்சம் ஒவ்வொரு வருஷமும் தோண்டி, தே
டத்தின் மற்றப் பாகங்களி லிருந்து மட்
இலைச் சருகுகளையும் வீட்டைச் சுற்றி அக
டும் குப்பையையும் சேகரித்து அக்கொடி
தொத்தியிருக்கும் மரத்தின் அடியில் ஒரு
குவியலாகப் போடுங்கள்.

வி. ஏ. பார்பர்,

கவர்ன்மெண்டு தாவரசாஸ்திரி